*Kumaran̲*

*Āram 6, muttu 27*

*February 14, 1929*

Record no. 313

eg. No. M. 1823. 16 பக்கங்கள். விலை 0-1-6.

# குமரன்

The "Kumaran" Published Every Thursday.

ஆரம் சு. } காரைக்குடி விபவஞு மாசிமீ கூ௨ வியாழக்கிழமை (14—2—1929.) { முத்து உஎ.

வெளியாகி விட்டது! வெளியாகி விட்டது!!

# குமரன் தினக்குறிப்பு.

(சுக்ல வருட டைரி)

## தமிழிலேயே ஒரு புது அபிவிருத்தி

**முறையாக டைரி எழுதாதவர்களும் வாங்கி உபயோகிக்கும்படியான விஷயங்கள் நிறைந்திருக்கின்றன.**



உயர்ந்த கிளேஸ் காகிதத்தில் அச்சிடப்பெற்று அழகிய குமரன் ஆப்டோன் படத்தோடு கண்கவர் வனப்பினதாய் கட்டப்பட்டு மிளிர்கின்றது. உயர்ந்த பென்சில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

தனவணிக நாட்டின் விஷயங்கள் ஏராளமாகத் தொகுக்கப் பெற்றிருக்கின்றன. ஒவ்வொரு நாட்களுக்கும் தனிப்பக்கங்களும் அதில் ஒவ்வொரு குறளும் அச்சிடப்பெற்றிருக்கிறது.

### இதில் அடங்கியுள்ள விஷயங்கள்.

இந்திய மாகாணங்கள்
சென்னை ஜில்லாக்கள்
காங்கிரஸ் மாகாணங்கள்
தமிழ்நாட்டு தேசிய ஜில்லாக்கள்
காங்கிரஸ் கூடிய இடங்களும் தலைவர்களும்
தென்னாட்டு சுதேச சமஸ்தானங்களும், தலை நகரங்களும்
இந்திய அரசாங்கம்
சென்னை சட்டசபை அங்கத்தினர்கள்
அரச குடும்பம்
அரசப் பிரதிநிதிகள்
சென்னைக் கவர்னர்கள்
மரியாதைக் குண்டுகள்
சமஸ்தான அரசர்களுக்கு மரியாதைக் குண்டுகள்
தபாற் குறிப்புகள்
வருமான வரி விகிதம்
தொழில் வரி விகிதம்
அளவுக் கணிதம்
நாள் சம்பளப் பட்டியல்
சென்னையில் மணியும் பிறநாட்டு மணியும்

சென்னையிலிருந்து பிற விடங்கட்குக் கடிதங்கள் போய்ச்சேர ஆகும் நாட்கள்
சுக்ல வருட பஞ்சாங்கம்
நாயன்மார் திருநாட்கள்
ஆழ்வார் திருநாட்கள்
பெரியார் திருநாட்கள்
விசேட நாட்கள்
அரசாங்க விடுமுறை நாட்கள்
நடப்பு வட்டிகள்
நாட்டுக்கோட்டையார் வசிக்கும் ஊர்கள்
நகரக்கோவில்களும் பிரிவுகளும்
இசைகுடி மானம்
பிராமணரல்லாதார் கட்சிப் பத்திரிகைகள்
தனவணிக நாட்டில் அரசாங்கப் பட்டம் பெற்றவர்கள்
காரைக்குடி முனிஸிபாலிடி
தேவகோட்டை தாலூகா போர்டு
ஷை யூனியன் போர்டு
கானாடுகாத்தான் யூனியன் போர்டு
பள்ளத்தூர் யூனியன் போர்டு

கோட்டையூர் யூனியன் போர்டு
கண்டனூர் யூனியன் போர்டு
சிவகங்கை தாலூகா போர்டு
ஷை யூனியன் போர்டு
இளையான்குடி யூனியன் போர்டு
மானாமதுரை யூனியன் போர்டு
நாட்டரசன்கோட்டை யூனியன் போர்டு
சிங்கம்புணரி யூனியன் போர்டு
யமனேஸ்வரம் யூனியன் போர்டு
பார்த்திபனூர் யூனியன் போர்டு
திருப்புவனம் யூனியன் போர்டு
காரைக்குடி பெஞ்சுக் கோர்ட்
தேவகோட்டை பெஞ்சுக் கோர்ட்
பள்ளத்தூர் பெஞ்சுக் கோர்ட்
கண்டனூர் பெஞ்சுக் கோர்ட்
இராமநாதபுரம் ஜில்லா போர்டு.
தவணைகள்
கணக்குகள்
வண்ணான் கணக்கு
சிநேகிதர் விலாசங்கள்
தபால் அனுப்பு
சொந்தக் குறிப்பு
நினைவுக்குறிப்பு

**விலை ரூபாய் ஒன்று.** **தபாற்கூலி அணா 5.**

50-டைரிகளுக்குக் குறையாமல் வாங்குவோருக்கு 100-க்கு 12½ கமிஷன் கொடுக்கப்பெறும்.

மானேஜர்,
**தனவைசியன் கம்பெனி லிமிடெட்.**
காரைக்குடி.

**கீழ்க்கண்ட இடங்களிலும் கிடைக்கும்.**

மெஸர்ஸ் ஏ. வி. அன் சன்ஸ், காரைக்குடி.
கணேசர் மெடிகல் ஹால், காரைக்குடி.
வைசியமித்திரன் பிரஸ், தேவகோட்டை.

*RM. S. RM. Firm 81|135*
*Upstairs, Mogul St, Rangoon.*
ராம. பழ. பிச. ராம. 102-பெல்பீல்டு வீதி, ஈப்போ.

சிவமயம்.

வாரப் பதிப்பு

சந்தா விபரம்.

உள்நாடு வருடம் ஒன்றுக்கு ரூ. ௫-0-0
ஆறு மாதம் ௩-0-0
பிரதி ௧-க்கு 0-௧-௬
வெளிநாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. ௬-0-0

# குமரன்

"என் கடன் பணிசெய்து கிடப்பதே"

மாதப் பதிப்பு

சந்தா விபரம்.

உள்நாடு வருடம் ஒன்றுக்கு ரூ. ௧-௮-0
வெளிநாடு வருடம் ஒன்றுக்கு ௨-0-0
தைமீ வருடாரம்பம்

"கதரே உயிர்"          "கருணையே தெய்வம்"

## வில்லின் செல்வன்.

திருவாளர் ரா. பி. சேதுப்பிள்ளை பி. ஏ. பி. எல்.



இலங்கை நாதனது மனைவியாய் அமைந்த மண்டோதரியின் மணிவயிற்றில் ஓர் மைந்தன் தோன்றினன், "விளையும் பயிர் முளையிலே தெரியும்" என்னும் முதுமொழிக்கிணங்க இம்மைந்தன் பிறந்தபொழுதே பெருங் குரலோடு வீறிட்டழுதான். இடி முழக்கம்போல் வெடிப்பாய் அழுத வெந்திறல் மைந்தனது வீரங்கண்டு இலங்கைநாதன் மனமகிழ்ந்து அவ்வழகிய மைந்தனுக்கு மேகநாதன் என்னும் பெயர் அமைத்தான். இளமையிலேயே வெம்மைசான்ற வீரக்கொழுந்தாய் விளங்கிய மேகநாதனுக்கு அமைந்த உணவருத்தி சிறு நெருப்பைப் பெருநெருப்பாய் வளர்த்தார்கள். இவ்வாறு மண்டோதரியின் மனம் களிக்க வளர்ந்து வந்த வீரனது வீர விளையாட்டைக் கண்டு அரக்கர் அனைவரும் வியந்து புகழ்ந்தார்கள்,

மேகநாதன் இளமையிலேயே படைக்கலம் பயின்று வில்லாண்மையில் ஒப்பாரின்றி உயர்வுற்றான். அரக்கருக்கும் அமரருக்கும் நிகழ்ந்த அரும்போரில் இமையவர் தலைவனாய இந்திரனை மேகநாதன் பாசத்தாற் பிணித்துச் சிறையிட்ட செயல் மூவுலகினும் பரவிற்று. அப்போரில் மேகநாதனது வில்லின் வன்மையைக்கண்டு பகைவரும் வியந்து பாராட்டினார்கள்.

"சந்த வில்லி முப்புரம்
    தழற்படச் சரந்தொடும்
அந்த வில்லி யுஞ்சினத்து
    அரக்கரோடு தானவர்
சிந்த வில்லி வைந்தெடுத்த
    தேவர்தேவ னும்மலால்
இந்தவில்லி யொக்கும் வில்லி
    எங்குமில்லை யில்லையே"

என்று நான்முகன் மேகநாதனது வீரத்தை வாயாரப் புகழ்ந்தான். திரிபுரம் எரித்த பெருமானும் திருமாலும் அல்லால் மேகநாதனை ஒக்கும் வில்லின் செல்வன் எவ்வுலகினும் இல்லை என்று அயனே சான்று பகரும் தன்மை அறியத்தக்கதாகும். இவ்வாறு இந்திரனைப் பாசத்தாற் பிணித்து வென்றமையால் மேகநாதன் 'இந்திரசித்து' என்னும் சிறப்புப் பெயர் பெற்றான்.

இவ்வீரனது கட்டழகையும் கலங்கா வலிமையையும் கண்ணுற்ற அநுமன் அவனை எளிதில் வெல்ல இயலாதென்று உணரும் திறம் அறிதற்குரியதாகும்.

"வளையும் வாளெயிற் றரக்கனே
    கணிச்சியான் மகனே
அளையில் வாளரி யனையவன்
    யாவனோ வறியேன்
இளைய வீரனும் ஏந்தலு
    மிருவரும் பலநாள்
உளைய வுள்ள போர் இவனொடு
    முளதென வுணர்ந்தான்"

என்று கம்பர் அருளிய கவியில் மேகநாதனது இளமையும் அழகும் வலிமையும் இனிது இலங்கக் காணலாம், இத்தகைய வீர மைந்தனைப் பெற்றெடுத்த இலங்கை வேந்தன் செம்மாந்து இலங்கையில் அரசு புரிந்தான்.

மேகநாதனது இணையற்ற வீரம் இலங்கையில் நிகழ்ந்த கடும்போரில் இனிதாய் இலங்கிற்று. இலங்கை மாநகரைச் சூழ்ந்த கருங்கடலைக் கடந்து, அரக்கர்கோன் ஆதரித்து வளர்த்த அசோகவனத்தை அழித்து, அரக்கர் சேனையைச் சிதைத்து, சம்புமாலியை வதைத்துப் பஞ்ச சேனாபதியரைப் பருந்துக்கு விருந்தாக்கி அரக்கர் வேந்தன் மகனாய அக்கனை அரைசாந்து போல் தரையில் தேய்த்து அஞ்சாது ஆர்த்த அடல் கடந்த தோள் அநுமனை பாசத்தாற் பிணித்துவென்ற பெருமை வில்லின் செல்வனாய மேகநாதனுக்கே உரியதாகும், மலைபோலுயர்ந்த மாருதியின் மீது வெம்பாசம் விடுத்த மேகநாதனது பெருமையை,

"மண்துளங்கிட மாதிரம்
    துளங்கிட மதிதோய்
விண்துளங்கிட மேருவும்
    துளங்கிட விட்டான்"

என்று கவிக்கு நாயகர் போற்றிப் புகழ்ந்தார்.

இன்னும் இராமனது சேனை இலங்கைமாநகரம் போந்து, கூற்றையும் ஆடல்கொண்ட கும்பகர்ணனைக் கொன்று, விதியாலும் வெலற்கரிய அதிகாயனை வதைத்து வெற்றி பெற்ற செயலைக் கேட்டபோது மேகநாதனது கண்ணும் மனமும் காற்றுபோல் சுழன்றன, மானத்தால் உள்ளம்கொதித்தது, அப்பொழுதே போர்க்கோலம் புனைந்து மாற்றாரைக் கொல்லப் புறப்பட்டான், இவ்வாறு சென்ற இந்திரசித்தும், இலக்குவனும், நெடும்பொழுது கடும்போர் விளைத்தார்கள், எவ்வாறாயினும் அன்று இலக்குவனது சேனையை வென்று முடிப்பதாக வஞ்சினம் கூறிய மாயச் செல்வனாய மேகநாதன் விண்ணிலே மறைந்து நின்று வெம்மைசான்ற பாசத்தை விடுத்தான், அந்நாகபாசம் இளைய வீரனையும் வானர சேனையையும் வலியப் பிணித்து மண்ணிடை வீழ்த்தியது. மாற்றாரை மண்ணிடைப் படுத்து மேகநாதன் இலங்கை வேந்தனது மாளிகை போந்தான். இவ்வாறு கொற்றமங்கலம் முழங்க இராவணனது கோயில் புகுந்த மேகநாதனது பெருமையை

"சொற்றது முடித்தேனெனா
    வென்னுடற் சேர்வைநீக்கி
மற்றது முடிப்பேனென்னு
    வெண்ணினன் மனிதன்வாழ்க்கை
இற்றது குரங்கின்றானை
    யிறந்ததென் றிரண்போலும்
கொற்றமங்கலங்க ளார்ப்ப
    இராவணன் கோயில்புக்கான்"

என்று கவி கூறும் அழகு அறிந்து களித்தற்குரியதாகும். இவ்வாறு மேகநாதனது பாசத்தால் நலிந்த சேனை கருடனது வரவால் உயிர்பெற்றெழுந்தது.

அப்பால் அரக்கர்கோனது படைத்தலைவரும் மகரக் கண்ணனும் மாண்டதை அறிந்த மேகநாதன் மீண்டும் போர்க்கோலம் புனைந்து மாற்றாரோடு மலைந்து மலரோன் படையைவிடுத்தான். அப்படையின் வெம்மைக்கு ஆற்றாது இளைய வீரனும் வானரர்களும் விழுந்து சாய்ந்தார்கள். இதைக்கண்ட மேகநாதன் வெற்றிச் சங்கம் முழக்கி வேந்தனது மாளிகை சேர்ந்தான். இவ்வாறு நிமிர்ந்த மனத்துடன் இலங்கை வேந்தனிடம் சென்ற வில்லின் செல்வனது வெற்றியை

'வெங்கண் வானரக் குழுவோடும்
    இளையவன் விளிந்தான்
இங்குவந் திலனகன் றனன்
    இராமனென் றிகழ்ந்தான்
சங்க முதினன் றுதையை
    வல்லையிற் சார்ந்தான்
பொங்கு போரிடைப் புகுந்தன
    பொருளெலாம் புகன்றான்"

என்று கவிகூறும் மொழிகள் உள்ளத்தைக் கவர்வனவாம். மலரோன் படையால் மாண்ட சேனை மாருதி கொணர்ந்த மருத்துமா மலையால் மீண்டும் உயிர்பெற்றெழுந்தது. இவ்வாறு மலரோன் படையால் மாய்ந்து மாருதியின் மருந்தினால் உயிர்பெற்றெழுந்த மாற்றாரது எளிமையையும் எவராலும் வெல்ல இயலாத இராவணனது பெருமையையும் மேகநாதன் அறிந்து கூறும்முறை மிக அழகியதாகும். நிகும்பலையில் நிகழ்ந்த நிகரற்ற பெரும்போரில் எதிரே நின்ற இலக்குவனை நோக்கி,

"ஊனுடை உடம்பினிச்சி
    மருந்தினால் உயிர்வந்தெய்தும்
மானுடர் இலங்கைவேந்தைக்
    கொல் வரோ"

என்று மேகநாதன் கூறும் மொழிகளில் அவனது உள்ளம் பளிங்குபோல் ஒளிர்கின்றது.

வீரமன்னனாய இராவணனது மைந்தனாய்ப் பிறந்து, அவனது வீரத்தோள்களில் அமர்ந்து விளையாடி, வீரமாநகரில் வளர்ந்து வீரருடன் பழகி, வீரருள் வீரனாய் விளங்கிய வில்லின் செல்வன் நிகும்பலையில் மாற்றாருடன் வீரப்போர் புரிந்து வீரமரணம் எய்தினான். இலக்குவனது அம்பினால் அறுபட்ட மேகநாதனது தலையை அங்கதன் எடுத்து வந்து இராமன் முன்னே வைத்தான், அப்பொழுது அயோத்தியண்ணல் அங்கதனை அமர்ந்து நோக்கி அகமகிழ்ந்து,

"வன்தலை எடுத்து நீமுன்
    வருதலால் வானரேச
என்தலை எடுக்க லானேன்
    இனிக்குடை எடுப்பேனென்றான்"

என்று கவி கூறுமாறு இறும்பூ தெய்தினான் என்றால் மேகநாதனது வலிமைக்கு வேறு சான்றும் வேண்டுமோ? வில்லின் செல்வனாய மேகநாதனது தலையற்று வீழ்ந்த பின்னரே வீரனாய இராமன் தலை எடுத்தான்; விண்ணோர் தலை எடுத்தார்; மண்ணோர் தலை எடுத்தார்; வேதக்குலம் தலை எடுத்தது என்று கவி கூறும் கருத்தை ஆராயும் பொழுது மேகநாதனது பெருமை சொல்லாமலே விளங்கும். இதனாலேயே மேகநாதன் மடிந்தபொழுது விண்ணோர் அளவிறந்த உவகையால் ஆடையை அவிழ்த்தெறிந்து ஆடினார்கள்.

"வில்லாள ராளுர்க் கெல்லாம்
    மேலவன் விளித லோடும்
செல்லாதவ் விலங்கை வேந்தற்
    கரசெனக் களித்த தேவர்
எல்லாரும் தூசு நீக்கி
    வேதிட வார்த்த போது
கொல்லாத விரதத் தார்தம்
    கடவுளர் கட்ட மொத்தார்"

என்று கவி கூறும் சொற்களில் மேகநாதனது இணையற்ற பெருமை இனிது விளங்கக் காணலாம். மேகநாதன் விழுந்தபொழுது இராவணன் விழுந்தான் என்றெண்ணி வானோர் மகிழ்ந்தார்கள். சிறையிருக்கும் சீதையை எய்தியதாகவே கருதி இராமன் சிந்தை குளிர்ந்தான், மேகநாதனைவென்ற இளைய வீரனை இராமன் இனிது நோக்கி,

"கம்ப மதத்துக் களியானைக்
    காவற் சனகன் பெற்றெடுத்த
கொம்பு மென்பா லினிவந்து
    குறுகினள் என்றெனக் குளிர்ந்தேன்"

என்று இராமன் கூறிய சொற்கள் ஆராய்தற்குரியனவாம், மேகநாதன் இறந்த பின்னர் இராவணன் இறப்பது திண்ணமென்றும், சீதையை மீட்பது எளிதென்றும் கருதிய இராமவீரன் அந்நொடியிலும் சீதை வந்து சேர்ந்தாளென மனம் குளிர்ந்தான்.

இத்தகைய வீரனை இழந்த இலங்கைமாநகரம் எரியில் விழுந்த மலர்போல் வாடி வருந்திற்றென்று சொல்லவும் வேண்டுமோ? மகனை இழந்த மண்டோதரி மலையின்மேல் மயில் வீழ்ந்தாற்போன்று மைந்தன்மேல் மறுகி வீழ்ந்தாள்,

"தலையின்மேற் சுமந்த கையள்
    தழலின்மேன் மிதிக்கின்றாள்போல்
நிலையின்மேன் மிதிக்கும் தாளள்
    கேசநா ளிறந்த கெந்தள்
கோவையின்மேற் குதித்த வேடன்
    கூர்ங்கணை புயிரைக் கொள்ள
மலையின்மேன் மயில் வீழ்ந்தென்ன
    மைந்தன்மேன் மறுகி வீழ்ந்தாள்"

மைந்தன் மீது விழுந்த மண்டோதரி கோகிலம் போன்ற குரலை மொழிகளால் அழுது அரற்றும் மொழிகள் கருங்கல்லையும் கரைப்பனவாம். இறந்த மைந்தனது மழலைப் பருவத்தை நினைந்தாள், தாளரிச் சதங்கை யார்ப்பத் தவழ்ந்த பருவத்தை நினைந்தாள். அளவிறந்த சோகத்தால் அழுதலமந்தினள்.

"கலைபிறைத் தீங்க னென்ன
    வளர்சென்ற காலத்தே புன்
சிலையிறு மரிய வென்னைக்
    காண்பதோர் தவமும் செய்தேன்
தலையிலா யாக்கை காண
    வேதவஞ் செய்தே னந்தோ
நிலையிலா வாழ்வை யின்று
    நினைவிலே நினைவிலா தேன்"

என்று மைந்தனை நோக்கி உருகும் மண்டோதரியின் மொழிகள் மனத்தைப் பிளப்பனவாம், இவ்வாறு இலங்கைமாநகரம் குலுங்க வில்லின் செல்வனாய மேகநாதன் உயிர் கொடுத்துப் புகழ் கொண்டான்.

(தொடரும்)

# பம்பாயில் கலவரம்.

### பலர் கொல்லப்பட்டனர்.

போலீஸார் துப்பாக்கிப் பிரயோகம்.

பரோடாவில் ஒரு பாலம் கட்டப் படுவதாகவும், இதற்கு நரபலி கொடுப்பதற்காகப் பட்டாணியர் குழந்தைகளைக் களவு செய்துகொண்டு வந்ததாகவும் எண்ணி ஜனங்கள் பீதிகொண்டதால் பம்பாயிலும் சுற்றுப்பக்கங்களிலும் சென்ற சில நாட்களாகக் குழப்ப மேற்பட்டிருக்கின்றது. இதன் பயனால் பலர் காயமுற்றிருக்கின்றனர். பல விடங்களில் குடிசைகள் தீ வைக்கப்பட்டிருக்கின்றன.

குழந்தைகளைத் தூக்கிக்கொண்டு போகிறவன் என நினைத்து மகதிபுராவில் ஒரு பட்டாணியை ஆயிரம் பேர் கொண்ட கூட்டம் தாக்கியதால் அவன் அபாய நிலையிலிருப்பதாகத் தெரிகிறது. இரண்டு கிரேக்க மாலுமிகள் இதன் காரணமாகத் தாக்கப்பட்டனர். பி. பி. ஸி. ஐ. ரெயில்வே தொழிற்சாலையைச் சேர்ந்த பதினாயிரம் தொழிலாளர்கள் பிப்ரவரி முதல் தேதி வேலை நிறுத்தஞ் செய்து விட்டனர். இதைப்பற்றி பமபாய் கவர்ன்மெண்டார் அறிக்கை வெளியிட்டிருக்கின்றனர். பட்டாணியர் குழந்தைகளைத் திருடிக்கொண்டு போவதாகக் கூறப்படும் வதந்திக்கு ஆதாரமில்லையென்று அதில் குறிக்கப் பெற்றிருக்கிறது.

பம்பாய், பிப்ரவரி ௯—

வேலை நிறுத்தம் அதிகரித்துவிட்டது. போலீஸ் கமிஷனர் ஆபீஸில் பிரிட்டிஷ் துருப்புகள் தயாராக விருக்கின்றன. சென்ற சில தினங்களில் நடைபெற்ற கலவரங்களால் ௧௨ பேர் இறந்திருக்கின்றனர். இன்று காலை ௫ பேர் இறந்தனர். சுமார் ௭௦ பேருக்குக காயமேற்பட்டிருக்கிறது.

### தொழிலாளர் கூட்டம்.

தொழிலாளரை வேலைக்குத் திரும்பும்படி தலைவர்கள் கேட்டுக் கொண்டனர். ஆனால் அவர்கள் கழிகளுடன் 'சிவப்புக் கொடிக்கு வெற்றி' யெனக் கூவிக்கொண்டு தெருக்கள் வழியாகச் செல்கின்றனர்.

### போலீஸாருக்கு அடி.

கலவரத்தில் போலீஸாரும் தாக்கப் பட்டனர். உத்தியோக உடையின்றி நின்ற போலீஸ் கமிஷனரும், சூப்பரின்டெண்டெனும் கத்தியால் தாக்கப் பட்டனர். கடைகள் மூடப்பட்டுவிட்டன. ஒரு ஐரோப்பிய இன்ஸ்பெக்டர் மீது ஒரு பட்டாணி கல்லெறிந்தான். அவர் முகத்தில் பலத்த காயமேற்பட்டு ஆஸ்பத்திரியில் உயிர் துறந்தார்.

பம்பாய், பிப்ரவரி ௬—

கலவர சம்பந்தமாக இன்று ௪௦ பட்டாணியரும் ௬ முஸ்லீம்களும கைது செய்யப்பட்டனர். இன்றைய தினம் ௨ பேர் கொல்லப் பட்டார்களென்றும், ௬௦ பேர் காயமுற்றன ரென்றும் சொல்லப்படுகிறது. இரண்டிடங்களில் இன்று துப்பாக்கிப் பிரயோகம் செய்யப்பட்டது. மண்டை உடைந்துபோன ஒருவனை போலீஸார் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் சென்றுகொண்டிருந்த பொழுது ஒரு முஸ்லீம் கூட்டம் பின் தொடர்ந்து துரத்தி வந்ததால், துப்பாக்கிப் பிரயோகம் செய்யப்பட்டது. வீதிகளில் இரண்டு பிணங்கள் கண்டெடுக்கப் பட்டன. ஜனங்களுக்குள் அமைதியை உண்டுபண்ணத் தலைவர்கள் முயற்சிசெய்து வருகின்றனர்.

### அரசாங்க அறிக்கை.

கலவர சம்பந்தமாக அரசாங்கத்தார் ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கின்றனர். அதில் பிப்ரவரி ௭-ம் தேதிவரை ௯௯-பேர் கொல்லப் பட்டிருக்கிறதாகவும், ௨௦௦ பேர் காய முற்றிருக்கின்றனரென்றும் குறிக்கப் பட்டிருக்கிறது. மேலும், ஹிந்து முஸ்லீம் தலைவர்கள் கலவரம் நிகழும் இடங்களுக்குச் சென்று ஜனங்களை அமைதியாயிருக்கும்படி கேட்டு வருகின்றனரென்றும் எவ்வளவு பெரிய குழப்பம் நேர்ந்தாலும் அதை அடக்கப் போதிய படைகளிருக்கின்றனவென்றும் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் ஜோலியை அமைதியாகப் பார்க்க வேண்டுமென்றும் கூறுகின்றது. ௬-ம் தேதி வரை கலவரம் கொஞ்சம் நின்றிருந்தது. ஆனால் ௬-ம் தேதியன்று முக்கியமாக கக்காலிக் கூட்டத்தினர் பெண்டி பஜாரில் சென்றுகொண்டிருந்தவர்களைத் தாக்க வாரம்பித்தது மன்றி ராணுவத்தினர் சென்ற லாரி மீது கற்களை எறிந்தனரென்றும் இக்கூட்டத்தினர் கலைந்துபோக மறுத்ததால் ராணுவம் முதல் தரம் ௮ம் இரண்டாந்தரம் ௧௧ம் மாக குண்டுபோட்டதென்றும் இதனால் ௬ பேர் காயப்பட்டார்கள் என்றும் ௯ ஹிந்துக்கள் கொல்லப்பட்டனரென்றும் தெரிகிறது. கலவரங்கள் நடந்த பிரதேசங்களில் கூட்டம் கூட்டமாய்ச் சென்றுகொண்டிருந்த ஜனங்கள் போலீஸாரைக் கண்டதும் மறைந்துவிடுகின்றனர். பட்டாணியர் தடிகளை விட்டு விட்டு கத்திகளால் குத்த ஆரம்பித்துவிட்டார்கள்.

### வெற்றிலைக் கடைக்காரன் கொலையுண்டான்.

ஆர்சையல் ரஸ்தாவில் வெற்றிலைக் கடைக்காரனை ஒரு ஹிந்துவை பட்டாணிக் கூட்டம் தாக்கிக் கத்தியால் குத்திக் கொன்றது. அடுத்த கடையிலிருந்த தான்ய வியாபாரியும் அவன் மகனும் உடனே தம்கடையை மூடிவிட்டனர். அக்கூட்டம் கடையின்கதவை பலாத்காரமாகத் திறந்து அவ்விருவரையும் குத்திக்கொன்று அவ்விரு கடைகளையும் கொள்ளையிட்டுச் சென்றது.

### பட்டாணியரின் அட்டகாசம்.

பட்டாணியர் தெருக்களில் அட்டகாசம் செய்தனர். போலீஸாரைக் கண்டதும் ஓடி ஒழிந்தனர். ஆஸ்பத்திரியில் ௪௦-பேர் சிகிச்சைக்காகச் சேர்க்கப்பட்டனர். இவர்களில் பெரும்பாலோர் ஹிந்துக்கள். கணவர்களைத் தேடிச்செல்லும் ஹிந்து ஸ்திரீகள் பலர் தங்கள் கணவர்களை ஆஸ்பத்திரியிலும காணாது அலைகின்றனர். ௯௦ பட்டாணியர்களைப போலீஸார் கைது செய்தார்கள். பூனாவிலிருந்து முதலாவது ஈசஸ்டர் படை வந்திருக்கிறது.

### பொதுக்கூட்டம்.

நகரில் அமைதி ஏற்படுத்தும் பொருட்டு பம்பாய்க் கார்ப்பரேஷன் மண்டபததில் கார்ப்பரேஷன் பிரஸிடெண்ட் டாக்டர் ஜி. வி. தசமுகரின்தலைமையில் பெரிய கூட்டமொன்று கூடிற்று. பல பிரபலஸ்தர்களும் சமூக பிரதிநிதிகளும் கூட்டத்தில் பேசினர். நகரில் சமாதானத்தை நிலைநாட்டுவதற்கான திட்டங்களைச் செய்ய கார்ப்பரேஷன் பிரஸிடெண்டைத் தலைவராகக் கொண்ட ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது. கூட்டம் நடந்துகொண்டிருக்கும்போதே காமாட்டி புரத்தில் பெரிய கலவரம் நடந்ததாகச் செய்தி எட்டியது. உடனே ஸ்ரீமான் கே. எப். நாரிமனும பல முஸ்லீமகளும் அவ்விடத்துக்குச் சென்றார்கள்.

### தலைவர்கள் வேண்டுகோள்.

பம்பாய் பிப்ரவரி ௭—

இதன் பின் போராபஜாரில் பனியன் என்பவரை இரண்டு முஸலீமகள் குத்திக் கொன்றார்கள். முஸ்லீம்களும் பட்டாணியரும் சேர்ந்து ஹிந்துக்களை கண்டகண்ட இடங்களில் புடைக்கின்றனர். இதுவரை ௯௮ ஹிந்துக்களும் ௪௦ பட்டாணியரும் ௬ முஸ்லீமகளும் போலீஸாரால் கைதியாக்கப் பட்டனர். ஹிந்து சட்டசபைத் தலைவரும் முஸ்லீம் தலைவர்களும் தொழிலாளர் தலைவர்களும் சேர்ந்து ஜனங்களை அமைதியாக இருக்கும்படி துண்டுப் பிரசுரங்கள் வெளியிடுகின்றனர். 'டைம்ஸ் ஆப் இந்தியா' இக்குழப்பத்தை விசாரித்து காரணம் தெரிந்து பொறுப்பை நிர்ணயிக்க ஒரு கமிட்டி நியமிக்க வேண்டுமென்று வற்புறுத்துகிறது. இதுவரை ௯௪ பேர் கொல்லப் பட்டதாகவும் ௯௯௪ பேர் காயப்பட்டதாகவும் தெரிகிறது. பூனாவிலிருந்து ஒரு பிரிட்டிஷ் பட்டாளமும் தியோலாலியிலிருந்து ௨ படைகளும் வந்திருப்பதாக விளம்பர உத்தியோகஸ்தர் அறிக்கை வெளியிட்டிருக்கிறார்.

### ராணுவ அமுல்.

பம்பாய் பிப்ரவரி ௮—

பிப்ரவரி ௮-ம் தேதி இரவு ௧௧-மணிக்குப் பிறகு ராணுவச் சட்ட அமுல் ஏற்பட்டிருப்பதாக ஒரு செய்தி அறிவிக்கிறது. இதைக்கண்டு கலவரம் விளைவித்தவர்கள் பயந்து ஓடிவிட்டார்கள். வியாழக்கிழமை மாத்திரம ௯௯ பேர் கொல்லப்பட்டனரென்றும் ௧௨௦-பேர் காயப் பட்டனரென்றும் தெரிகிறது. இன்னும் பல கடைகள் கொள்ளையிடப் பட்டன.

பம்பாய், பிப்ரவரி ௮—

டாங்கிரியிலும், ஜகேரியா மசூதியிலும் பட்டாணியர்கள் ஹிந்துக்களைத் தாக்கினர். ராணுவ வீரர்கள் துப்பாக்கிப் பிரயோகஞ் செய்தனர். பீரங்கிப்படைகள் தெருக்கள் வழியாக அடிக்கடி சென்றுகொண்டிருக்கின்றன.

### சமரஸம்.

ஹிந்துக்கள், மகமதியர்கள், பட்டாணியர்களடங்கிய ஒரு பெரிய ஊர்வலம் இன்று மாலை 'இந்து முஸ்லீம்க்கு ஜே' என்ற கோஷத்துடன் கிரான்டு ரோடு வழியாகச் சென்றது. தலைவர்களால் சமரஸம் உண்டுபண்ணப்பட்டதாகத் தெரிகிறது.

டாக்டர் தேசமுகி கவர்ன்மெண்டாருக்கு ஒரு கடிதம் விடுத்திருக்கிறார். தற்காலிகமாக சகல மதுபானக கடைகளையும் மூடவேண்டுமென்றும், தடிகள் தாங்கி எவருஞ் செல்லலாகாதெனத் தடுக்க வேண்டுமென்றும், தெருககளிலும், மூலை முடுக்குகளிலும் போலீஸ் காவல் ஏற்படுத்த வேண்டுமென்றும், குழந்தைகள் திருடப்படுகின்றனவென்பதற்கு ஆதாரமில்லையென்று பறைசாற்ற வேண்டுமென்றும் அக்கடித மூலமாகக் கவர்ன்மெண்டாரைக் கேட்டிருககிறார்.

வேலை நிறுத்தஞ் செய்திருந்த ஆலைகளிற் பெரும்பாலானவற்றிலும் வேலை ஆரம்பமாகிவிட்டது.

---

### வெடி மருந்து விபத்து.

ஐவர் மாண்டனர்.

பொள்ளாச்சியில், வெடி மருந்து தயாரிக்கும் ஒரு வீட்டில், ஒரு பெரும் விபத்தேற்பட்டதால் ஐவர் இறந்தனர். அவர்களில் நால்வர் பெண்கள். மருந்தைக காயவைத்துககொண்டிருந்த கூலி புகைத்ததாகவும், அதனால் மருந்து தீப்பிடித்து விபத்தேற்பட்டதென்றும் தெரிகிறது.

### பிரிட்டிஷ் பாராளுமன்றத்தில் ஸ்திரீ அங்கத்தவர்கள்.

சமீபத்தில் லண்டனில் நடைபெற்ற பார்லிமெண்ட் உபதேர்தலில் ஸ்ரீமதி ஹுயூ டால்டன் என்ற மாது பெரும்பாலான ஓட்டுகளால் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். அவருக்கு மொத்தம் ௧௪௭௧௭ ஓட்டுகள் கிடைத்திருக்கின்றன. அவருக்கு எதிராக நின்ற திரு. கறி என்பவருக்கு ௭௯௨ ஓட்டுகளும், திரு. தாம்ஸன் என்பவருக்கு ௯௯௫ ஓட்டுகளும் கிடைத்திருக்கின்றன. இவரோடு மொத்தம் ௯-ஸ்திரீ அங்கத்தினர்கள் பார்லிமெண்டிலிருக்கின்றனர். அவருடைய கணவர் திரு. டால்டன் ஏற்கனவே அங்கத்தவராயிருக்கின்றார். இதைப்போன்று ரன்ஸிமான்ஸ் தமபதிகளும் பொதுமக்கள சபையில் அங்கத்தவராயிருக்கின்றனர்.

### ஹரிலால் காந்தியின் மரணம்.

மகாத்மா காந்தியின் பேரன் திரு. ரசிகலால் ஹரிலால் காந்தி பிப்ரவரி ௮-ம் தேதி புதிய டில்லியில் உயிர் துறந்தார். அங்குள்ள தேசீயக்கலாசாலையில் அவர் நூற்றல் கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்தார். சென்ற ஒரு மாதகாலமாக அவர் சுரத்தால் வருந்திக் கொண்டிருந்தார்.

### நிஸாம் அரசரின் நன்கொடை.

மேன்மைதங்கிய நிஸாம் அரசர் மேன்மைதங்கிய சென்னைக் கவர்னரிடம் பலவித தரும கைங்கரியங்கட்காகச் செலவு செய்யும்படி ௨௫௦௦௦ ரூபாய் நனகொடையளித்திருக்கிறார். அவரது சென்னை விஜயத்தின் ஞாபகார்த்தமாக இது கொடுக்கப்பட்டிருக்கிறது.

---

## முதலாவது மாகாண சுயமரியாதை மகாநாடு.

௧௭, ௧௮-ம் தேதிகளில் செங்கற்பட்டில் கூடப்போகும் முதலாவது சுயமரியாதை மாகாண மகாநாட்டிற்கான வேலைகளெல்லாம் அனேகமாய் முற்றுப்பெற்று விட்டன. மகாநாடு பனகால் தோட்டத்தில் அழகுற அமைக்கப் பெற்றிருக்கும் நாயர் மண்டபத்தில் கூடும். தோட்டத்தில், சுயமரியாதைப் பூர்தோட்டம் அமைக்கப் பெற்றிருக்கிறது. பாரதி தோட்டம், பாண்டுமைதானம், தபாலாபீஸ், பத்திரிகைப் பிரதிநிதிகள் ஆபீஸ், விஷயாலோசனைக் கமிட்டி மண்டபம், பாங்கு, அச்சுக்கூடம், வாசகசாலை முதலியவை தனித்தனியாக நிறுவப் பட்டிருக்கின்றன. கடைகளுக்காகத் தனி இடம் ஒதுக்கப்பட்டுப் பல கடைகள் கட்டப் பட்டிருக்கின்றன. கார்கள் நிறுத்துவதற்காகப் பிரத்தியேக இடம் ஒதுக்கப் பட்டிருக்கிறது. இவற்றிறகுச் செல்ல, குடி அரசு ரோடு, திராவிடன் ரோடு, ஜஸ்டிஸ் ரோடு, ரிவோல்ட் ரோடு, சமதர்சினி வழி ஆகியவை செப்பனிடப் பட்டிருக்கின்றன. பல ஊர்களிலிருந்தும் ஏராளமான மக்கள் பிரதிநிதிகளாகவும், வரவேற்புக்கழக அங்கத்தினர்களாகவும் விஸிட்டர்களாகவும் பதிவு செய்திருக்கின்றனர்.

### நாடகம்.

பிப்ரவரி ௧௭-ம் தேதி இரவு ௯-௩௦ மணிக்கு திருச்சி முருகானந்த சபையார் 'சந்திரா-கமலா' என்ற சுயமரியாதைச் சீர்திருத்த நாடகத்தை நடத்துவார்கள்.

### கத்தி விளையாட்டு.

அன்று புகழ்பெற்ற வீரர்களால், கத்தி விளையாட்டு, சிலம்பம முதலிய வேடிக்கைகள் நடத்திக் காட்டப்படும்.

## மதிப்புரை.

### நீதிநெறி விளக்கம்.

[உரையாசிரியர்: திரு. அ. மகாதேவ செட்டியார். வெளியிட்டவர்: ஸ்ரீசாது இரத்தினசற்குரு புத்தகசாலையார், பார்க் டவுன், சென்னை. பக்கம் ௨௫௦. விலை: ரூ. ௧—௮—௦.]

திருக்குறளின் சாரத்தைத் திரட்டி ஸ்ரீ குமாரகுருபர சுவாமிகள் அருளிச் செய்த நீதிநெறி விளக்கம் என்னும் உயரிய நூலின் விருத்தி உரையும் ஆங்கில உரையும் இதன்கண் அடங்கியிருக்கின்றன. ஒவ்வொரு செய்யுளுக்கும் சமயோசிதம்போல், குறள்கள் பரிமேலழகர் உரையுடன் மேற்கோள்களாக எடுத்துக் காட்டப்பட்டிருப்பது மாணவர்கட்கும், ஏனையோர்க்கும் சிறந்த பயனளிப்பதாகும். பிற நூல்களிலிருந்தும் எடுத்துக்காட்டுக்கள் குறிக்கப்பெற்றுள்ளன. ஒவ்வொரு செய்யுளுக்கும், அச்செய்யுள் குறிக்கும் விஷயத்தின் பெயர் பொறிக்கப் பெற்றுள்ளது. யாவர்க்கும் மிக எளிதாக விளங்கும் முறையில் பதவுரை, தொகுத்துரை, விருத்தியுரை என்ற முப்பாகுபாடுகளால் உரை வகுக்கப் பட்டிருக்கிறது. தமிழர் யாவரும் இந்நூலைப் படித்துப் பயன்பெறும் முறையில், சொற்ப விலையில் அச்சிடப்பட்டு வெளியிட முன்வந்திருக்கும் ஸ்ரீசாது இரத்தினசற்குரு புத்தகசாலையாரின் தொண்டு போற்றத்தக்கது. நூலின் முடிவில் வினையுருபுகள், வெண்பா, முதலியவற்றைப்பற்றிய இலக்கணக் குறிப்புகள் அநுபந்தமாகச் சேர்க்கப்பெற்றுள்ளன.

### ஸ்ரீ கணபதி நாமாவளி.

[வெளியிட்டவர்: ஷை புத்தகசாலையார். விலை: அணா ௪. பக்கம் ௮௨]

இந்நூல் திரு. தி. அ. சுப்பராய தேசிகாவர்களால் சமஸ்கிருத உச்சரிப்புக் கிணங்க தமிழில் பெயர்த்தெழுதப் பட்டிருக்கிறது. கைக்கடங்கும அளவில், சிறந்த முறையில் செவ்விதாக அச்சிடப்பெற்றிருக்கிறது.

### ஸ்ரீ சுப்ரமணியர் நாமாவளி.

[வெளியிட்டவர்: ஷை புத்தகசாலையார் விலை: அணா ௩. பக்கம் ௬௪.]

மேற்குறித்த நூலைப்போன்று இதுவும் சிறிய அளவில் அச்சிடப்பெற்றிருக்கிறது. இதுவும் திரு. தி. அ. சுப்பராய தேசிகாவர்களால தமிழில் பெயர்த்தெழுதப்பட்டதாகும்.

### ஸ்ரீ லகு ராமாயணம்.

[வெளியிட்டவர்: ஷை புத்தகசாலையார். விலை: அணா ௪. பக்கம். ௮௦.]

இதில் ராமாயணத்தின் உட்பொருள் சுருக்கிக் கூறப்பட்டிருக்கிறது. இந்நூல் சிறிய அளவில் தெளிவாக அச்சிடப்பெற்றிருக்கிறது.

### அருட்பெருஞ் ஜோதி அகவல்.

[வெளியிட்டவர்: பர்மா, சமரச சன்மார்க்க சங்கத்தார். பக்கம்: ௭௨. விலை கிடையாது.]

வடலூர் ஸ்ரீ இராமலிங்க சுவாமிகள் திருவாய் மொழிந்தருளிய இப்பாக்களை, ஷை சங்கத்தார் தொகுத்து சுவாமிகளின் ௧0௫-வது திருநட்சத்திர விழாவன்று இலவசமாய் வழங்கியிருக்கின்றனர். ஞான ஒளிச்சுடர் கொளுத்திய சுவாமிகளது உயரிய கருத்துக்களை யாவரும் எளிதில் உணர்வதற்குத் துணைபுரிய முன்வந்த சங்கத்தாரது தொண்டு போற்றற்குரியதாகும். புத்தகம் சிறந்த முறையில் அழகாக அச்சிடப் பட்டிருக்கிறது.

## செந்தமிழ்ச் செல்வம்.

### தமிழ் நாடும், தமிழ் வளமும்.

"தென்தமிழ்நாட் டகன்பொதியில் திருமுனிவன்
தமிழ்ச்சங்கம் சேர்கிற்றீரேல்,
என்றும்அவண் உறைவிடமாம் ஆதலான்
அம்மலையை இடத்திட்டேகிப்
பொன்திணிந்த புனல்பெருகும் பொருநையெனும்
திருநதியின் பொழிய, நாகக்
கன்றுவளர் தடஞ்சாரல் மயேந்திரமா
நெடுவரையும் கடலும் காண்டிர்"

—கம்பர்.

குறிப்பு:—சீதையை நாடி வருமாறு வானர வீரர்களை ஏவிய தலைவன் வார்த்தை இது. வடவேங்கடத்தை விலகிச் சென்று, தொண்டை நாடு கடந்து பொன்னி யெனும் தெய்வ நதி தாண்டிப் பொருநையெனும் திரு நதியும் மயேந்திரமலையும் கடலும் காண்பீர் என்பது கருத்து. இவ்வாறு கூறும் தலைவன், "தென் தமிழ் நாட்டில் அமிழ்தினும் இனிய தமிழ்மொழி பிறந்த அகத்தியமலை யொன்றுண்டு; அம்மலையில் முத்தமிழ் வளர்க்கும் முனிவேந்தன் தமிழ் ஆராயும் சங்கமுண்டு; அத்தமிழ்ச் சங்கத்தை அடைந்தால், அஃது உங்களுக்கு என்றும் உறைவிடமாகும்—அதாவது, நித்தியவாசமாகும் (என்றும் அவண் உறைவிடமாம்). ஆதலால் அங்கே செல்லாது, அம்மலையை இடத்திட்டு விலகி ஏகுதல் வேண்டும்" என்று நகைச் சுவையோடு தமிழ் நயமும் தமிழ் வளமும் காட்டுகின்றான். இராமன் காதலியும் ஆருயிருமாகிய சீதையை நாடும் இன்பப் பணியினும் அதிக இன்பம் அளிப்பது தமிழ் ஆராய்ச்சி—தமிழ்ச் சங்கம் என்பது கம்பருள்ளம். கம்பரது தமிழ்ப்பற்று அவரது இராம பக்தியையும் வென்று விடுகிற தன்றோ.

(பக். ௯௰)

—தமிழ்த் தொண்டன்.

### சுயராஜ்ய அமைப்பு.

[வெளியிட்டவர்: குடன் கம்பெனி சௌகார்பேட்டை, சென்னை. பக்கம்: ௨௫௦. விலை: அணா ௧௨.]

இது, இந்தியாவின் சுயராஜ்ய அமைப்பைத் திட்டஞ் செய்த நேருக் கமிட்டியாரின் அறிக்கையின் மொழிபெயர்ப்பாகும். இதில் நேருக்கமிட்டி நியமனம் முதல் அவர்கள் அறிக்கை வெளியிட்டதுவரையுள்ள விஷயங்கள் அடங்கியிருக்கின்றன. மேலும் பஞ்சாப், வங்காள, ஜனத்தொகை விவரங்களும், சர்வகட்சி மகாநாட்டு நடவடிக்கைகளும் அநுபந்தங்களாய்ச் சேர்க்கப் பட்டிருக்கின்றன. தேசியவாதிகள் ஒவ்வொருவர் கையிலும் இப் புத்தகம் இருக்கவேண்டியதவசியமாகும்.

### 'தமிழ்நாடு' விநோதப்படங்கள்.

'தமிழ்நாடு' புத்தகசாலையார் வெளியிட்டிருக்கும் விநோதப்படங்களின் முதல் பாகம், இரண்டாம் பதிப்பின் பிரதி யொன்று கிடைக்கப்பெற்றோம். 'தமிழ்நாடு' பத்திரிகையில் உலக நிகழ்ச்சிகளையும் அரசியல் மாற்றங்களையும் விநோதமாக விளக்க வெளியிடப்பட்டுவந்த வேடிக்கைப் படங்கள் பல இதில் பொறிக்கப்பெற்றிருக்கின்றன. இத்தொகுதி நாட்டில் நிகழ்ந்த சில முக்கியமான பழைய நிகழ்ச்சிகளை ஞாபகமூட்டும் குறிப்பாயிருப்பதுமன்றி, மகிழ்ச்சியைத் தரத் தக்க சாதனமாகவுமிருக்கின்றது. இதன் விலை நாலணா.

### 'தாருல் இஸ்லாம்' பத்தாம் ஆண்டுப்பூர்த்தி விழா மலர்.

சென்னையினின்றும் வாரந்தோறும் வெளிவரும் 'தாருல் இஸ்லாம்' என்ற சிறிய பத்திரிகை தனது பத்தாவதாண்டைப் பூர்த்தியாக்கிவிட்டதைச் சிறப்பிக்க வெளியிடப்பட்டிருக்கும் அழகிய மலர் கிடைக்கப்பெற்றோம். முஸ்லீம் மதக்கோட்பாடுகளின் உண்மைத் தத்துவத்தை விளக்கி சிறந்த சமூகத் தொண்டுபுரிந்துவரும் இவ்வுயரிய பத்திரிகைக்கு வாழ்த்துக் கூறுகின்றோம். ஆசிரியர் ஜனாப், பா. தாவூத்ஷா பி.ஏ. அவர்களுடைய வாழ்க்கை குறிப்பும், பல அரிய விஷயங்களும் இம்மலரில் பொறிக்கப்பெற்றிருக்கின்றன. தேசத் தலைவர்களுடைய படங்களும் அயல் நாட்டு வீரர்களுடைய படங்களும், அச்சிடப்பெற்று மலர் கண்கவர் வனப்புடன் விளங்குகின்றது. விலை அணா ஐந்து. வேண்டுவோர் 'தாருல் இஸ்லாம்' காரியாலயத்திற்கெழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

### சென்னை வர்த்தமானி.

இப்பெயருடன் சென்னையினின்றும் புதிதாகத் தோன்றியிருக்கும் தமிழ் வாரபத்திரிகையின் முதலிதழ் கிடைக்கப்பெற்றோம். இதன் ஆசிரியர் திரு. ஆர். கிருஷ்ணமாச்சாரியார் அவர். பன்னிரண்டு பக்கங்களுடன் திகழும் இப்பத்திரிகையில் உலக வர்த்தமானங்கள் பல அச்சிடப்பெற்றிருக்கின்றன. வேறு பல பொது விஷயக் குறிப்புகளும் காணப்படுகின்றன. வருடச் சந்தா ரூபா மூன்று.

## நமது நாடு.

### புள்ளி விவரம்.

நமது நாட்டில் தற்பொழுது நாலு கோடி விதவைகளிருக்கிறார்கள். வருணாசிரம தர்மிகளின் மகாநாடுகள் அதிகப்பட அதிகப்பட, இத்தொகை அதிகரிக்குமென்பதிலைய்யமில்லை. இந்த 'தெய்விக' நாட்டில், பார்க்கத் தகாதவர், தீண்டத்தகாதவர், அணுகத்தகாதவர் முதலியோர் ஆறுகோடிப் பேராவர். கோடிக்கணக்கானவர் பட்டினியால் இறந்துகொண்டிருக்கும் பொழுது நூறுகோடி ரூபாய் கோவில்களில் பத்திரமாய் போடப்பட்டிருக்கின்றது. 'அறநிலையங்கள்' என்ற போலிப் பெயர்பூண்ட சோம்பேறி மடங்கள், பசியில்லா பிராமணர்களுக்குச் சோறு போடுகின்றன. மத சம்மதமாகக்கோடிக்கணக்கான பெண்கள் தீயவொழுக்கத்தில் புகுத்தப்படுகின்றார்கள். அவர்களுக்காக, திரு. சத்தியமூர்த்தி பி. ஏ. பி. எல்., எம். எல். சி. (சுயேச்சைவீக் காரியதரிசி) பரிந்து பேசுகிறார். மடாதிபதிகள், சங்கராச்சாரிகள், மகந்துகள் முதலியோர், தக்கர்பிண்டாரிகள் இவர்களுடைய வேலையை அரசாங்க சம்மதத்துடன் கைக்கொண்டிருக்கின்றனர். ஒவ்வொருவீட்டிலும், கலைத் தெய்வம் வணங்கபபடும் நாட்டில் ஆயிரத்துக்கு ஒன்றரைப் பேர் விதமே பெண்கள் படித்தவராயிருக்கின்றனர். வருடந்தோறும் மிக ஆடம்பரத்துடன் சரஸ்வதிபூஜை நடத்தப்படும் நாட்டில் நூற்றுக்கு எழுபேரே படித்திருக்கின்றனர். இத்தகைய 'தெய்விக' நாட்டில் பிசாசுகளும், பேய்களும் பிற கொடிய தேவதைகளும் சாசுவதமாக நிலைத்துவிட்டன. 'சகலமதங்களிலும் மேலான மத'த்தின் பலன்களை ௧௯௨௦-ம் வருடத்துப் புள்ளிவிவரங்கள் இன்னும் தெளிவாக விளக்கும்.

—'ரிவோல்ட்.'

### The Bhupindra.

பாடியாலாவிலுள்ள சாரணச் சிறுவர் சங்கத்தால் வெளியிடப்பட்டுவரும் இவ்வாங்கில மாதப் பத்திரிகையின் இதழ் கிடைக்கப்பெற்றோம். இளைஞர்கள் வீரவாழ்வு வாழ்வதற்குரிய முறைகள் இதில் குறிக்கப்பெற்றுள்ளன. மாணவர்க்கும் ஏனையோர்க்கும் பயன்தரத்தக்க பல விஷயங்கள் இதில் அச்சிடப்பெற்றுள்ளன. வருடச் சந்தா ரூபா இரண்டு. மாணவர்களுக்கும் சாரணர்களுக்கும் ரூ௧-௮-௦. "Managing Editor, The Bhupindra, Patiala" என்ற விலாசத்திற்கெழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

### பழனி தேவஸ்தானம்.

#### தலைவர் தேர்தல்.

ஜனவரி ௨௪-ம் தேதி நடைபெற்ற ஷை தேவஸ்தானக் கமிட்டிக் கூட்டத்தில் பழனி சர்க்கிள் தேவஸ்தானத்திற்கு திரு. வீ. பெ. ஸ. சிதம்பரம் செட்டியாரவர்கள் தலைவராகவும், திரு. வீ. கெ. பழனிச்சாமி கவுண்டர் அவர்கள் உபதலைவராகவும் தேர்ந்தெடுக்கப் பெற்றிருக்கிறார்கள்.

### ராஜம்மாள் கொலை.

சில தினங்களுக்கு முன் பெங்களூர் மெயில் வண்டியில் நேரிட்ட கொலை சம்பந்தமாக, ஸ்ரீமதி ராஜம்மாளின் சகோதரியும், ஒரு மோட்டார் டிரைவரும், பாலகோபால கிருஷ்ணன் என்ற இருவரும், கைது செய்யப்பட்டிருக்கின்றனர். விசாரணை நடைபெற்று வருகிறது.

### புதுக்கோட்டை ரிஜன்ஸி கவுன்ஸில் தலைவர்.

சமீபத்தில் புதுக்கோட்டையில் ரிஜன்ஸி கவுன்ஸில் நியமிக்கப்படுமென்றும், அதன் தலைவராக திரு. டி. ராகவய்யா நியமிக்கப் படுவாரென்றும் புதிய டில்லிச் செய்தி கூறுகிறது.

# வி ள ம் ப ர ம் .

இராமநாதபுரம் ஜில்லா திருவாடானை தாலுக்காவில் அரு. அரு. சோம. வுக்கு சொந்தமான கோவிந்த மங்கலம் ஜமீன் விளம்பரங்கள்

| நெ. | கிராமங்களின் பெயர். | நஞ்சை ஏக்கர் | நஞ்சை செ. | புஞ்சை ஏக்கர் | புஞ்சை செ. |
|---|---|---|---|---|---|
| 1 | கோவிந்தமங்கலம் | 307 | 97 | 145 | 80 |
| 2 | மூலவயல் | 116 | 1 | 149 | 40 |
| 3 | மேலக்கரை | 344 | 92 | 64 | 80 |
| 4 | குரிச்சிணுக்கரை | 46 | 66 | 3 | 15 |
| 5 | கொடுங்குளம் | 114 | 83 | 47 | 70 |
| [illegible] | [illegible] | 22 | 11 | 191 | 85 |
| 7 | [illegible] | [illegible] | [illegible] | 19 | 35 |
| 8 | பாசனி கட்டயசேர்தல் | 12 | 99 | 30 | 90 |
| 9 | மூக்ளிக்குடி | 29 | 53 | 24 | 30 |
| 10 | இடயக்குடி | 93 | 62 | 36 | 0 |
| 11 | கொக்கூரணி | 273 | 50 | 179 | 33 |
| 12 | சிரிகனத்தார் | 78 | 47 | 108 | 0 |
| 13 | பல்வாரி யேர்தல் | 25 | 10 | | |
| 14 | பெரியகீரந்தை | 191 | 2 | 71 | 55 |
| 15 | மேட்டுக்கீரந்தை | 47 | 49 | 36 | 90 |
| 16 | பஞ்சவராயன்கோட்டை | 16 | 8 | 55 | 80 |
| 17 | சிருகுடி | 144 | 14 | 78 | 30 |
| 18 | பணிக்கசேர்தல் | 32 | 44 | 108 | 0 |
| | | 1926 | 66 | 135 | 137 |

மேல்கண்ட கிராமங்களின் வருஷ சிலவுபோக மீதி வருமானம் சுமார் ரூ. 15000

மேல் சொல்லிய கிராமங்களை மொத்தமாகவாவது தனித்தனியாகவதுவா வேண்டுமானவர்கள் வாங்கிக்கொள்ளலாம்.

மேல்கொண்டு விபரங்கள் தேவையானவர்கள் சென்னப்பட்டணம் ஹை கோர்ட்டு அபீஷியல் அசைனீ அவர்களிடமிருந்து தெரிந்துகொள்ளலாம்.

ஹைக்கோர்ட்டு ஹவுஸ் சென்னை. } (303)

F. H. வில்சன், அபிஷியல் அசைனி.

எம். ராமனுதன் அண்ட் பிரதர்ஸ், நடராஜா தேசவுசாலை, நரசிங்கன்பேட்டை.

(300)

14-ம்வருடம் பிறந்துவிட்டது! 14-ம் வருடம் பிறந்துவிட்டது!!

## "ஆனந்தபோதினி."

ஓர் உயதர தமிழ் மாதப் பத்திரிகை.

64 பக்கங்களில் உயர்ந்த வியாசங்களுடனும், ஆப்டோன் படங்களுடனும், லயன் பிளாக்குகளுடனும் வெளிவருவது.

தமிழ் நாட்டில் உள்ள மாதசஞ்சிகைகளில் முதன்மை பெற்றது.

14 வருடங்களாக நடைபெற்று வருகிறது.

20,000 சந்தாதாரர்களுடையது. எல்லோரும் படிக்கத்தக்கது.

இந்தியா, பர்மா, சிலோன் ஆகிய உள் நாடுகளுக்கு வருட சந்தாருபா 1—0—0.

பினங்கு, சிங்கப்பூர், நெட்டால் முதலிய வெளிநாடுகளுக்கு வருட சந்தா ரூ. 1—4—0. மாதிரிக் காப்பி இனும்.

விலாசம்;— ஆனந்தபோதினி ஆபீஸ், நெ. 6. வெங்கடேச மேஸ்திரி தெரு, மதறாஸ்.

(273)

## மகாத்மா காந்தி ஜோசியர்.

தரும நியாயமான 5 கேள்விகளுக்கு ரு 1. மேல் ஒவ்வொரு கேள்விக்கும் அணு 4. கடிதம் எழுதும்போதுள்ள நேரத்தைக் குறிப்பிடல் வேண்டும். எ,, லாக் காரியங்களிலும் அனுகூலமான பலனைக் கொடுக்கும் "ஜய வசீகரணி தாயத்து 1-க்கு ரு. 1. ஸ்பெஷல் தாயத்து ரு. 50. மற்றவிபரங்கட்கு நேரில் எழுதித் தெரிந்துகொள்ளவும்.

(288) ஆஞ்சநேய சுவாமி ஜோதிடாலயம், திருத்தணிகை, சித்தூர் ஜில்லா.

தந்தி விலாசம் :— ஹனுமான்.

## புரோபஸர் அன்பையன்,

எம். ஏ. எப். பி. பி. ஐ. எம். ஆர். ஏ. எஸ் (லண்டன்)

இந்தியா, சிலோன், மலாய் நாடுகளில் பையோசைக்கலாஜிகல் டாக்டர் இவர் ஒருவரே.

முந்துங்கள்! முந்துங்கள்!

100000 கணக்கான ஜனங்கள் தேகம், மனம், ஆவியைப்பற்றிய விஷயங்கள் சரிவர தெரியாமல் திடீரென மரண ,, மடைகிறார்கள், புது வாழ்க்கை ஜீவ ரஹஸ்யம் என்னும் அரியகோர்ஸுகளை வாசித்து தங்கள் ஜீவியத்தை கணித்துக் கொள்ளுங்கள்.

1 வருஷ கணித்தல் ரூ. 5/- 5 வருஷம் ரூ. 10/-10 வருஷம் ரூ. 25/- முழு ஜீவியம் ரூ. 100/-. அமெரிக்கன் நாவலிஸ்டு ஒருவர் எழுதுகிறார். அமெரிக்காவில் ஆத்மீக கணித்தலுக்கு ரூ. 615/-சார்ஜ் செய்யப்படுகிறது. வித்தியாஸத்தைக் கவனியுங்கள்!

ஸ்பேஷல் கன்சஷன் :— 1 வருஷ கணித்தல், புது வாழ்க்கை, ஜீவ ரஹஸ்யம் 50 கேள்விகளுட்பட ரூ. 5/- வி. பி. சார்ஜ் வேறு. சொற்பகாலம் வரை முந்துங்கள். மற்ற விபரங்களுக்கு நேரில் எழுதித் தெரிந்துகொள்ளலாம்.

இந்திய ..யோ சைக்லாகஜிக்கல் டிபார்ட்மெண்ட், பப்ளிக் ரோட், நாகூர்.

(290)

## மின்சாரரசம்

சகல வியாதிகட்கும் தேவாமிர்தம் போன்றது.

பத்தியமில்லை! அநுபான மில்லை!!

உள்ளுக்கும் மேலுக்கும் துளிகள் கணக்காக உபயோகித்து நிமிஷக் கணக்கில் குணமடையலம்.

**விசேஷம்.**

மனிதர்கள் தலை முதல் கால் வரையில் வரும் சகல வியாதி கட்கும் மின் சார ரசத்தை உபயோகித்து ஆச்சரியகரமாக குணமடையலாம். எவ்வித ஆபத்துக்கும் உதவும்.




**டக்டர்.**

ஒரு பாட்டில் மின்சார ரசம் கையிலிருந்துவிட்டால் ஒரு டாக்டர் நம் வீட்டில் இருப்பதுபோல தைரியமாக இருக்கலாம். ஒரே முறை பரீக்ஷியுங்கள். கைகண்ட மருந்து.

டாக்டர்களால் கைவிடப்பட்ட அநேகர் மின்சர ரசத்தினுல் உயிர் பெற்றிருக்கிருர்கள்.

ஆயிரக் கணக்கான நற்சாக்ஷிப் பத்திரங்கள் பெற்றது.

இன்றைக்கே எழுதுங்கள். கேட்லாக் இனம்.

புட்டி 1-க்கு ரூ 2. தபால் சார்ஜ் வேறு.

விலாசம்:— மின்சார ரசம் கம்பேனி (லிமிடெட்) சேலம்.

செட்டிமார் நாட்டில் முக்கியமான வியாபாரிகள். } மெஸர்ஸ் A. V. அண்டு சன்ஸ், காரைக்குடி.

(287)

# காரைக்குடி முனிஸிபாலிடி.

(நமது நிருபரிடமிருந்து)

சென்ற வியாழக்கிழமை மாலை ௫-௩0 மணிக்கு முனிஸிபல் கூட்டம் நடைபெற்றது. திருவாளர்களான வீ. சித. நா. சிதம்பரஞ் செட்டியார், சிங்காரவேலுப் பிள்ளை ஆகிய இருவரும் தவிர மற்ற அங்கத்தினர்கள் யாவரும் ஆஜராகியிருந்தனர்.

கவர்ன்மெண்டு ஆர்டர்கள் ரிக்கார்டு செய்யப்பட்டன. முத்துப்பட்டணம் முத்துராமன் செட்டியார் தெரு சாலை பரப்ப ரூ. அ௫0 அனுமதிக்கப்பட்டது. பால் நெய் முதலியவற்றில் கலப்படங்கள் செய்வதைப்பற்றிய ஆக்டை அமுலுக்குக் கொண்டுவருவதென்று தீர்மானிக்கப்பெற்றது.

## கார் ஸ்டாண்டு.

கார்ஸ்டாண்டுகள் இரண்டிலும் க0௫0 ரூ. லைசன்ஸ் பீஸ் வசூலிப்பதென்று தீர்மானிக்கப்பட்டது.

ரோட் மராமத்து வேலைகளை அளவிட திரு. சி. மு. அரு. முத்துராமன் செட்டியாரும் திரு. ஐயாச்சாமி சேர்வையும் கொண்ட ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது.

## வைஸ் சேர்மன்.

திரு மு. ராம. பெரியணன் செட்டியார்:- இத்தீர்மானத்தை அடுத்த மீட்டிங்குக்குத் தள்ளிவைக்கவேண்டும்.

தலைவர்:— எத்தனை கூட்டத்திற்குத் தான் தள்ளிவைக்கிறது?

திரு. பெரியணன் செட்டியார்:— அபிப்பிராய பேதமிருப்பதால் தான அப்படி நேருகிறது. சமாதானமாக அடுத்த கூட்டத்தில் முடித்துவிடலாம்.

ராவ்பகதூர் சிதம்பரம் செட்டியார்:— பதினைந்து கூட்டத்திற்கு ஒத்திவைத்தாலும் அபிப்பிராயபேதமிருக்கும். மற்றவைகளிலெல்லாம ஒற்றுமைதான். இப்படியே போனால் என்ன ஆகிறது? தலைவராவது தமமுடைய அபிப்பிராயத்தைச் சொல்லவேண்டும.

தலைவர்:— நீங்கள் தாலூகா போர்டு தலைவராயிருந்து அனுபவம பெற்றவர்கள். உங்கட்கு அதிகமாகச் சொல்லவேண்டியதில்லை. மெம்பர்களுக்குள் அபிப்பிராய பேதம் வரும்போது இடையில் தலைவருடைய அபிப்பிராயத்தைத் தெரிவிப்பது நியாயமாகாது. எந்தக கட்சிக்கும பொதுவாக இருப்பதே நல்லது. மசனை கார்ப்பரேஷன் தலைவர் திரு. ராமசாமி முதலியார் 'கட்சிபேதம் பாராட்டமாட்டேன்' என்று கூறியிருக்கிறார். இவ்விஷயத்தில் நான் ஒன்றுஞ் சொல்லமுடியாது. நடு நிலையாகத்தான் இருப்பேன்.

திரு. சி. மு. அரு. முத்துராமன் செட்டியார்:— தள்ளிவைப்பதுதான் நல்லது.

திரு. ப. ராம. பழ. பழனியப்ப செட்டியாரும், திரு. சித. நா. நாராயணன் செட்டியாரும் இதை ஆதரித்தனர்.

ராவ்பகதூர் சிதம்பரம் செட்டியார்:— ஒத்திவையுங்கள். ஆனால் அடுத்த கூட்டத்திற்கென்று வேணடாம். நோக்கம போல் நாலு மாதஙகட்கு அப்பால் வேண்டுமானாலும் வைககலாம். கூட்டத்திற்குக் கூட்டம இதை வைக்கவேண்டாம.

அடுத்த கூட்டத்திற்கென்றில்லாமல் பொதுவாக, தேதி குறிபபிடாமல ஒத்திவைக்கப்பட்டது.

சுகாதார சங்கத்தின் தீர்மானங்கள் ரிக்கார்டு செய்யப்பட்டன.

## செஞ்சைக்குப் புது வீதி.

பறையன் கண்மாய் கீழ் பாகத்தில் செஞ்சைக்குப் போவதறகு ஒரு வீதி திறக்க வேண்டுமென்று கொண்டுவரப்பட்ட தீர்மானம் எடுதது்க் கொள்ளப்பட்டது.

திரு. சொ. முருகப்ப செட்டியார்:- இடம் அக்வையர் செய்வதா?

ராவ்பகதூர் சிதம்பரம் செட்டியார்:— இல்லை. இப்பொழுது வீதியாகவே பாவிக்கப்படுகின்றது.

தலைவர்:—இடம் அவர்கள் கொடுத்தால் திறக்கலாமென்றே தீர்மானிக்கலாம்.

சொ. முருகப்ப செட்டியார்:— பள்ளமாகவிருக்கிறது; செலவு அதிகமாகும். காண்டிரிபியூஷன் தந்தால் செய்யலாம்.

தலைவர்:— ரூபா இரண்டாயிரம் எஸ்டிமேட் போடபபட்டிருக்கிறது. பணத்திற்குத் தீர்மானம் வரும்போது பார்ததுக் கொள்ளலாம்.

ராவ்பகதூர் சிதம்பரம் செட்டியார்:— இப்பொழுதே அப்படிக்குறிப்பிட்டுவேண்டுமானாலும் செய்யலாம்.

தலைவர்:— இல்லை. பின்னால் வரும் போது பார்க்கலாம்.

இடம் கொடுக்கப்பட்டால் வீதி திறக்கலாம் என்று தீர்மானமாயிற்று.

## அயலூர் வண்டிகள்

அயலூர் வண்டிகள், கார்களுக்கு லைசன்ஸ் கொடுப்பதில்லை யென்று தீர்மானிக்கப்பட்டது.

## பட்ஜட்.

௧௯௨௯-௧௯௩0 க்குள்ள பட்ஜட் தீர்மானிக்கப்பட்டது. அதில் சில முக்கிய குறிப்புக்கள் வருமாறு:—

| வரவு | ரூ. |
|---|---|
| ஆரம்ப இருப்பு | உ௯,எ௯௯ |
| வீட்டுவரி | உ௫,000 |
| தொழில் வரி | அ,000 |
| கமபெனி வரி | உ00 |
| தமாஷா வரி | உ00 |
| பீசுகள் வகையறு | க,000 |
| இதர வருமானம | க௫0 |
| டோல்கேட் | எ௫,000 |
| வாகனங்கள் | எ,000 |
| வண்டிகள் | க,000 |
| கவர்ன்மெண்டு கிராண்டு | ௬00 |
| தாலுகாபோர்டிலிருந்து | ௫00 |
| ஜலதாரைத் தொட்டி வரி | க,௫00 |
| மார்க்கட் வருமானம் | ௬௫0 |
| ஸ்லாட்டர்ஹவுஸ் | ச00 |
| இடவாடகை | ச,௬00 |
| கவர்னர் தட்டி, பந்தல்கள் லைசன்ஸ் | ௫,000 |
| வட்டி வருமானம் | ௬00 |

| செலவு | ரூ. |
|---|---|
| ஆபீஸ் சிப்பந்திகள், பில் கலக்டர்கள் | ௬௬00 |
| ஸ்டாம்பு, அச்சுக்கூலி, காயிதம், விளம்பரங்கள், மற்றவிதமான சில்லரைச் செலவு | ச000 |
| பிரயாணச்செலவு | உ00 |
| கட்டிடம், மராமத்து, கோர்ட்டுச் செலவு | ௬00 |
| ரோடு சம்பந்தமான சிப்பந்திகள் சமபளம் | உச00 |
| பிரயாணச் செலவும் இதர செலவுகளும் | அ00 |
| ரோடு மராமத்து உ-வது வகுப்பு | ௬000 |
| இதர ரோடுகள் | க0000 |
| விளக்கு | கஉ000 |
| டாக்டர் வகையறு | க௫00 |
| சுகாதாரம், ஹாஸ்பிற்றல் வகையில் | சஅ00 |
| வைசூரி, தொத்து வியாதிகள், காலரா சமபந்தமாக | கசக0 |
| சுகாதார இன்ஸ்பெக்டர் சம்பளம | ககஉ0 |
| குப்பை கூட்டல் வகையில் | ௬௫00 |
| ஷை. வண்டி ரிப்பேர், மாடு சப்ளை வகையில் | ௬000 |
| சாக்கடைத்தொட்டி சிப்பந்திகள் வகையில் | உ௬00 |
| உற்சவங்கள், ஜனன மரணப் பதிவு வகையில் | ௫௫0 |
| வடிகால் வகைக்கு | எ௬00 |
| படிப்பு சம்பந்தம் | உ௫00 |
| ஆபீஸ் கட்டிடத்திற்கு | உ0,000 |
| பொதுக் கக்கூஸ் கட்ட | க000 |
| புதிதாக விளககுகள் போட | ௫00 |
| ஸ்லாட்டர் ஹவுஸ் கட்ட | ௬000 |
| டவுன் பிளானிங் சம்பந்தமாக | எ000 |
| ஆதித்திராவிட பள்ளிக்கூடத்திற்கு | க0000 |
| தண்ணீர் வசதி செய்ய | உ0000 |
| ரோடு ரோலர் இஞ்சின் | ௫000 |

## கக்கூஸ்.

தலைவர்:— எப்படியும் பொதுக் கக்கூஸ் கட்டித் தீரவேண்டும். ஆட்சேபனையில்லாத இடமாக இரண்டு இடங்களை இன்று குறிப்பிடுவது அவசியம்.

திரு. சி. மு. அரு. முத்துராமன் செட்டியார்:— மகார் நோன்புப் பொட்டல் தென் கிழக்கு மூலையில் கால்வாய் ஓரமாக ஒன்று கட்டலாம்.

திரு. கா. கு. இராமநாதன் செட்டியார்:- அங்கு கட்டினாலும் இல்லாவிட்டாலும் ஒன்றுதான்.

ராவ்சாகிப் சுப்பையா செட்டியார்:— கால்வாய்களின் மேல் கட்டலாம்.

திரு. சொ. முருகப்ப செட்டியார்:— ஊருக்கு வெளியே கட்டுவதில் பயனென்ன? நடு ஊருக்குள்தான் கட்டவேண்டும். கடனுக்குக் கட்டுவதானால் இந்த யோசனையை விட்டுவிடலாம்.

திரு. வெ. ராம. லெ. இராமசாமி செட்டியார்:— எல்லா இடத்திலும் வழக்குத் தான் வருகிறது. வழக்கில்லாத இடத்தைத் திடீரென்று சொல்லமுடியவில்லை. அடுத்த மீட்டிங்குக்கு வைக்கலாம்.

திரு. சித. நா. ராம. நாராயணன்செட்டியார்:- சேர்மனே யோசித்துச் செய்யலாம்.

தலைவர்:— அது முடியாது. நாங்கள் செய்தது போய்விட்டது. இனிக் கவுன்சில்தான் செய்யவேண்டும்.

ராவ்பகதூர் சிதம்பரம் செட்டியார்:— ஒரு கமிட்டி போட்டு யோசிக்கலாம். அதற்குத்தான் கமிட்டி வேண்டாமென்கிறார்களே?

தலைவர்:— கமிட்டித் தீர்மானத்திற்கு மதிப்பில்லாமல் போகிறதாலதான் வேண்டாமென்கின்றனர்.

திரு. வெ. ராம. லெ. இராமசாமி செட்டியார்:— கமிட்டியை நியமிக்கலாம்.

தலைவர்:—அப்படியானால் ஏறக்குறைய கமிட்டியில் செய்யும் தீர்மானம் கவுன்சிலில் செய்த மாதிரிதான்.

திரு. சொ. முருகப்ப செட்டியார் திரு. மு. ராம. பெரியணன் செட்டியார் ஆகிய இருவரும் அடங்கிய ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது.

## சித்த வைத்தியம்.

சித்த வைத்தியசாலைக்கு உதவி செய்ய வேண்டுமென்று அதன் காரியதரிசி விடுத்துள்ள விண்ணப்பத்தின் மேல்,

திரு. சி. மு. அரு. முத்துராமன் செட்டியார்:— கொடுத்து உதவி செய்யவேண்டியது அவசியம்.

ராவ்பகதூர் சிதம்பரம் செட்டியார்:— ஆயுர்வேத வைத்தியசாலை யொன்று ஏற்கனவே இருக்கிறது. இது வேறே அவசியமா?

திரு. சொ. முருகப்ப செட்டியார்:— ஆயுர்வேத வைத்தியசாலைக்கு நாமொன்றும் உதவி செய்கிறதில்லை. தவிர ஆயுர்வேதம் வேறு; சித்த வைத்தியம் வேறு. ஏதாவது உதவி செய்யலாம.

தலைவர்:— நூறு ரூபாய் கொடுக்கலாமா?

ராவ்பகதூர் சிதம்பரம் செட்டியார்:— ஐமபது ரூபாய் கொடுக்கலாம்.

ஐம்பது ரூபாய் கொடுப்பதென்று தீர்மானிக்கப்பட்டது.

## வீட்டுவரி

தலைவர்:—ரொக்கமாக வாடகை வாங்குபவர்க்கு விகிதத்தைக் குறைக்கக்குறைக்க லாபம். மற்றவர்க்கு இப்பொழுதிருக்கிற நிலையில் அதிகமாகத் தோற்றக்கூடும்.

ராவ்சாகிப் சுப்பையா செட்டியார்:— முன் நடந்ததற்காக இன்னும் கொடுக்க முடியுமா? விகிதத்தைக் குறைக்கத்தான் வேண்டும். ஆக்டு எப்படி இருக்கிறதென் பதையும் கவனிக்கவேண்டும்.

திரு. வெ. ராம. லெ. இராமசாமி செட்டியார்:— இதுவரை இருநாலுக இருந்த வாடகை மதிப்பை நானூறாக்கலாம்.

தலைவர்:— தேவகோட்டையில் அதிகமாக வாடகை மதிப்பு போடப்பட்டிருக்கிறது. இங்கு ஐ"ஸ்தி ரேட்டுக்கு க௫00-வது போடலாம்.

திரு. வெ. ராம. லெ. இராமசாமி செட்டியார்:— வருஷத்திற்கு ஒரு வீட்டுக்குப் பன்னிரண்டுக்குமேல் வாடகை வராது. வெறும் மதிப்பில் என்ன பிரயோஜனம்?

ராவ்பகதூர் சிதம்பரம் செட்டியார்:— வாடகை மதிப்பைக் குறைப்பதுதான் நல்லது.

தலைவர்:—ஏழைகளுக்குச் சாதகம் வேண்டும். பணக்காரர்களுக்குப் பாதகமில்லை.

திரு. சொ. முருகப்ப செட்டியார்:— பெரிய வீடு கட்டினவர்களுள்ளும் ஏழைகள் அதிகமுண்டு. தவிர, இங்கு வீடு கட்டுவது கலை செய்வதைப்போல இருக்கிறது. க௫00 ரூபாய் ஒரு நாளும் வாடகை வராது. கவர்ன்மெண்டார் வந்தாலும் இந்த வாடகைக்கு விட முடியாது.

ராவ்பகதூர் சிதம்பரம் செட்டியார்:— கடைத்தெருவிலுள்ள வீடுகளுக்கு ஏறக்குறைய வாடகை கிடைக்கும். மற்ற வீடுகளுக்கு வரவே மாட்டாது.

இதற்குமேல் ரூபாய் உ௫000 வீட்டு வரி இனத்தில் வரக்கூடுமென்று பட்ஜட்டில் போடப்பட்டது.

## பன்றி மாமிசம்.

பன்றி மாமிசம் விற்பனைக்கு லைசன்ஸ் அளிக்க வேண்டுமென வெங்கடேசன் என்பவர் கொடுத்திருந்த மனுவிற்கு, அந்தகைய லைசன்ஸ் அளிக்க முடியாதென்த் தீர்மானிக்கப் பட்டது.

## மதுவிலக்கு.

பிரசாங்கமாயிலாகவும், துண்டுப் பிரசுரமாயிலாகவும் இந்நகரில் மதுவிலக்குப் பிரசாரம் செய்வதற்கு ரூ ௫000 செலவிடுவதெனத் தீர்மானிக்கப பட்டது.

## இடங்களை வாங்குதல்.

தலைவர்:—டவுன் பிளானிங் டைரக்டர் தமது எழுதிய பலவற்றில் மிக முக்கியமான ஒன்றைப்பற்றி முருகப்ப செட்டியார் ஒரு தீர்மானம் கொண்டுவந்திருக்கிறார். ரயில்வே ஸ்டேஷனுக்கும், டவுனுக்கும இடையிலிருக்கிற இடங்களை அக்வையர் செய்து வாங்கவேண்டுமென்பது தீர்மானத்தின் நோக்கம். டிஸ்பென்ஸரி, பார்க், பப்ளிக் ஆபீஸ்கள், முதலியவைகளை அங்கே ஏற்படுத்தலாம். இது அவசியமா என்பதுதான் இபபோது யோசிக்கவேண்டியது.

திரு. மு. ராம. பெரியணன் செட்டியார்:- வாங்கி வைக்கவேண்டியது அவசியம். நான் இதனை ஆமோதிக்கிறேன்.

ராவ் சாகிப் சுப்பையா செட்டியார்:— எத்தனை ஏக்கர் வாங்குகிறது? முழுமையுமானால் ௬௫0 ஏக்கருக்கு குறையாது.

திரு. வேடப்பன் சேர்வை:—நூறு ஏக்கர் போதும். இதற்குப் பணத்திற்கு என்ன செய்கிறது?

தலைவர்:—கவர்ன்மெண்டில் குறைந்த வட்டிக்குக் கடன் வாங்கலாம்.

திரு. சி. மு. அரு. முத்துராமன் செட்டியார்:—கடன் வாங்கினால் பிறகு வரிப் போட வேண்டியதுதான்.

திரு. சா. லெ. செட்டியப்ப செட்டியார்:-நிலத்தை விற்றுத்தான் கடனைக் கொடுக்கிறது. எதிர்த்ததற்கெல்லாம் வரிப் போடுவதல்ல.

ராவ் சாகிப் சுப்பையா செட்டியார்:— இந்தத் தீர்மானப்படி செய்தால் அதிகமான லாபமும் வரக்கூடும்.

திரு. சொ. முருகப்ப செட்டியார்:— நிலத்தை வாங்கி விற்று லாபம் சம்பாதிப்பது நோக்கமல்ல. கண்டபடியாக வீடுகளைக் கட்டவிட்டால் சுத்தம் கெட்டு மாசுபடுகிறது. ஊரில் நுழைகிறபொழுது அழகாக இருக்கவேண்டுமென்பதுதான் கருத்து. நிலத்தை வாங்கிப் பெரிய வீதிகளாகத்

(10-ம் பக்கம் பார்க்க)

## பில் கலெக்டர் தேவை.

நமது ஆபீசுசகு உள்ளூரில் வரவேண்டிய நிலுவைப் பில்களுக்குப் பணம் வசூல் செய்ய ஒரு பில் கலெக்டா தேவை. மாதம் ஒன்றுக்குச் சம்பளம் ரூ. 20-0-0 கொடுக்கப்படும். ரூ. 300-க்கு ஜாமீன் கொடுக்க வேண்டும். விண்ணப்பம் நேரில் செய்து கொள்க.

மானேஜர்
குமரன் ஆபீஸ்,
காரைக்குடி.

நாளென் செயும்! வினைதானென்
செயும்! எனைநாடி வந்த
கோளென் செயும்! கொடுங்கூற்
றென் செயும்! குமரேசரிரு
தாளும் சிலம்பும் சதங்கையும்
தண்டையும் ஷண்முகமும்
தோளும் கடம்பும் எனக்கு முன்
னேவந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.

குமரன், காரைக்குடி
விபவ-ஹு மாசி-மீ க-உ

## செங்கற்பட்டு.

அடுத்து வரும் ஞாயிறு, திங்கட் கிழமைகளில் சென்னை மாகாண முதலாவது சுயமரியாதை மகாநாடு செங்கற்பட்டில் நடைபெறவிருக்கிறது. அம்மகாநாட்டைப் பற்றிய நிகழ்ச்சிகள் சென்ற சில வாரங்களாகக் குமரனில் தொடர்ந்து வெளியிடப்பட்டு வருவதை நேயர்களறிவர். இம்மகாநாட்டைப் போன்றதொரு சிறந்த மகாநாடு தமிழகத்தில் நடந்ததில்லையென்று கூறலாம். தமிழ் மக்களுக்குச் சிறந்ததொரு சாதகத்தை நல்கும்படியான மகாநாடு இதுவரைத் தமிழகத்தில் கூடியதில்லை. சென்ற பல்லாண்டு கட்கிடையில் இரண்டொரு காங்கிரஸ் ஆடம்பரமாக நடைபெற்றிருப்பினும் தமிழக மாந்தர்க்கு அதனால் எவ்வித நன்மையும் கிடைத்ததில்லை. இப்பொழுது கூடவிருக்கும் செங்கற்பட்டு மகாநாடு ஆசாரத்திருத்தத்தை—தன்மதிப்பை அடிப்படையாகக்கொண்டு கூட்டப்படுகிறதென்பது குறிப்பிடத்தக்கது. சென்ற பன்னூறாண்டுகளாக வைதிகக் கொடுமைக்கும், புரோகிதப் பிடுங்கலுக்கும், சாஸ்திரப் புரட்டுக்கும் அடிமைப்பட்டு தன்மதிப்பிழந்துகிடக்கும் பார்ப்பனரல்லாத மக்களுக்கு உணர்ச்சியை நல்குவது இம்மகாநாட்டின் நோக்கமாகும். தீண்டத்தகாதவரென்றும், பேசத்தகாதவரென்றும், பார்க்கத்தகாதவரென்றும், நல்லிடத்திற் குடியிருந்து வாழவும், நன்னீருண்தவும், நல்லுணவு கொள்ளவும், நல்லாடை உடுக்கவும், கல்வி அறிவு பெறவும் உரிமையற்றவரென்றும் பாகுபடுத்திப் பல்லாயிரம் ஜாதி பிரித்து தமிழகத்தைப் பாழ்படுத்திய பிராமணீய—வைதீகக் கொடுமையினை ஒழிப்பதற்குத் தென்னாட்டு மக்கள் செங்கற்பட்டில் திரள்கின்றனர். ஆண்டுப்பிறக்கும் தீர்மானங்களென்னும் அருங்குழவிகளால் இத்தமிழகம் புனிதமடையுமென்று நம்புகிறோம்.

தமிழக மக்களுள் இருப்பது போன்ற பிரிவினைகள் வேறெங்கணும் பார்க்க முடியா. ஜாதி வேற்றுமைமட்டுமா தமிழகத்திலிருக்கிறது? உடையில் வேற்றுமை; உணவில் வேற்றுமை; அறிவில் வேற்றுமை; படிப்பில் வேற்றுமை; விபூதியில் வேற்றுமை; நாமத்தில் வேற்றுமை; அடியில் வேற்றுமை; முடியில் வேற்றுமை; அணியில் வேற்றுமை; பணியில் வேற்றுமை என எண்ணற்ற வேற்றுமைகள் உண்டு. இலக்கண நூலார் தமிழில் எட்டு வேற்றுமை கற்பித்தார். இற்றைத் தமிழக மாந்தர் தம் வாழ்வில் கொண்டிருக்கும் வேற்றுமைகளை எண்ணி முடியுமோ? எழுதி முடியுமோ? சொல்லி முடியுமோ? கேட்டு முடியுமோ? வேற்றுமை உண்டாக்க வேண்டுமென்று ஆதியில் எண்ணிய படுபாவிகள் இத்தனை வேற்றுமைகள் பின்னரில் உண்டாகுமென்று எதிர்பார்த்திருக்க மாட்டார். அந்நாள் அவரிட்ட வேற்றுமைப் பயிரானது முள் நிறைந்த இலைக்கள்ளியைப் போன்று, தளிர்த்துச் செழித்துக் கொழுத்து வளர்வதாயிற்று. அக்கொடுங்காடு, அரவும், தேளும் மலிந்து ஊரையழிக்கும் பெருங் காடாகக் கிடக்கின்றது. இக்காட்டினை வெட்டி அழிப்பதற்கு ஒரு சிலரால் முடியாதென்பது திண்ணம். சிலர் சேர்ந்து சிறிது சிறிதாக வெட்டிப் போடுகிறார்களாயினும் போடுமிடமெங்கும் புது முளைதோன்றித் தழைத்து வளருவதையும் காண்கிறோம். வெட்டி அழிக்கும் பணி ஒருவாறிருப்ப, அதனை வளர்க்கவேண்டுமென்று கூறித்திரிவார் மலிந்து கிடப்பது வெட்கக் கேடாகுமன்றோ? நீண்டகாட்டை பயிரென்றும், முன்னோர் வளர்த்து வைத்த செல்வமென்றும், அதில் வாழ்வது அரவும், தேளும் ஆயினும், அவற்றை விலக்கு மிடமின்றி அவ்வயிடக் கூடாதென்றும், கற்றுழைக்காடு மல்கிருப்பதால் அந்நியர் உள்ளே புகமுடியாதென்றும் எனவே அக்காட்டினைப் பரிபாலிப்பதற்குப் பெருமுயற்சி செய்யவேண்டுமென்றும், அப்படி முயற்சி செய்யாவிடின் உலகமே அழிந்துவிடுமென்றும் பலர் புலம்புகின்றனர், கற்றுழை வளர்ந்திருப்பது ஊருக்குக் கேடுதான்; வேரோடு பிடுங்கி எறியக்கூடாது; புத்திசாலியான நமது முன்னோர்கள் அனுவசியமாக ஒன்றையும் செய்யமாட்டார்கள். எனவே இக்கற்றுழையின் மேற்பாகத்தைச் சிறிது சீவிவிடலாம் என்று கூறுவாருமுண்டு. ஆண்டுச் செறிந்து கிடக்கும் பையரவும், தேளும் இனித் தீமைபுரியாதவாறு அவற்றிற்குப் பாலூட்டி நல்ல புத்தி கற்பிக்கலாமென்று கருதி, இன்னு செய்வார்க்கு நன்னயம் செய்யுமாறு உபதேசிக்கும் சாதுக்களுமுண்டு. யார் என்ன கூறினும், என்னமுயற்சி செய்யினும் தமிழகத்திற்கு விடிவுகாலம் வந்ததாவென்பதே நமதுகேள்வி. கற்றுழைக்காட்டினை வேரோடு பறித்து, தடி கொண்டு அடித்து நொறுக்கி, குழி வெட்டி ஆழப் புதைத்து அழித்துவிடுவதைத் தவிர வேறு வழியில்லவே யில்லை.

செங்கற்பட்டில் இவ்வாரத்தில் கூடும் மகாநாட்டிற்குத் தமிழகத்திலுள்ள அறிஞர் யாவரும் வந்து கூடுவாரென்று நம்புகிறோம். நொண்டிச் சமாதானங்கள் கூறிச் செல்லாதிருப்பதிலும், மகாநாட்டைக் குறைபேசுவதிலும் பயனில்லை. தமிழகத்தில் முறுகி யெழுந்துள்ள சுயமரியாதை இயக்கத்தின் பலத்தைக் காட்டுதற்கு செங்கற்பட்டிற் கூடும் மகாநாடு தகுதி பெற்றிருக்கிறது. சுயமரியாதை இயக்கத்தின் நிலைமையை உணராது பிராமணீயக் கொடுங் குழியில் வீழ்ந்து மயங்கி நிற்கும் மக்களும் ஆண்டுச் சென்று தமிழ்நாட்டின் நிலையை அறிதல் வேண்டும். சென்ற நாற்பதாண்டுகளாக நடைபெற்றுவரும் காங்கிரஸ் கூட்டங்களாலும், அதன் வாலைப்பற்றி நடைபெறும் ஆசாரச் சீர்திருத்த மகாநாடுகளாலும் தமிழ் நாட்டு பார்ப்பனரல்லாத மக்களுக்குக் கிடைத்த பயனென்னே? சாந்தம், சிவம், அத்வைதம் என்னும் அற்புத வாக்கு இற்றைக் தமிழ்நாட்டில் எமக்கு இனிக்கவில்லை. என்ன செய்யலாம்? பார்ப்பான் முதல் பஞ்சமன் ஈறாகக் கூறப்படும் ஜாதி வேற்றுமைகள் ஒழிந்து, எல்லா மனிதரும் ஒன்றென்று கருதும்படியான நிலை வரும் பொழுதுதான் அத்வைதமும், சிவமும், சாந்தமும் அநும்புதல் கூடும் என்பதை உண்மைச் சமயவாதிகள் ஒப்புக்கொள்ளாதிருக்க முடியுமோ?

தமிழகத்தில் பிறந்த தமிழன்பர்களே! விழியுங்கள்! கண்களைத் துடைத்துக்கொண்டு செங்கற்பட்டை நோக்கி நடவுங்கள்! ஆங்கு போடப் பெறும் திட்டங்களில் பங்கு கொள்ளுங்கள்! சுயமரியாதை இயக்கத்திற்குத் தோள் கொடுங்கள்! வீரர்களும், தீரர்களும் தோன்றிய குலத்தில் உதித்தோமென்பதை என்றும் மறவாதீர்கள்!

---

## எண்டிசைக் காட்சி.

**கதர்.**

சென்ற வாரத்தில் கதராடைகளைத் திருச்சியில் தீயிற்போட்டுக் கொழுத்தியதாக ஓர் செய்தி கிடைத்தது. ஏன் அப்படிச் செய்யப்பட்டதென்ற விஷயம் நமக்கு விளக்கமாகத் தெரியவில்லை. அம்மாதிரி கொளுத்தியதற்குக் காரணராயிருந்தவர் ஜஸ்டிஸ்கட்சித்தலைவர்களன்று. கதரியக்கமானது புனிதமுடையதென்பதை எவரும் மறுக்க முடியாது. பார்ப்பனரல்லாத மக்களுக்குப் போதாவளித்து நிற்பது கதராகும் என்று நாம் திடமாக நம்புகிறோம். கதர் நூல் நூற்பதாலும், நெய்வதாலும் கிடைக்கும் ஊதியத்தைப் பார்ப்பனரல்லாதார் அடைந்துவருவதைக் காணலாம். பார்ப்பனர் அதனைக் கொள்ளையிட முடியாது. பார்ப்பனரல்லாதாரை ஒழித்துப் பார்ப்பனர் மட்டும் நூல் நூற்று நெசவு செய்து இவ் வியக்கத்தை நடத்தமுடியாதென்பது உறுதி. கதரியக்கம் உயிரோடிருப்பின் அது பார்ப்பனரல்லாதாராலேயே நடைபெறுதல் கூடும். அதிலிருந்து பார்ப்பனரல்லாதாரைப் பிரித்து விட்டால் சொற்பத்தொகையினரான பார்ப்பனர் அதனைத் தாங்கி நடத்த முடியாதென்று கூறவேண்டியதில்லை. ஆனால் இன்றிருக்கும் கதரியக்கத்தில் மேலுத்தியோகங்களைத் தாங்கி, பார்ப்பனர் கொடுமை செய்கின்றார் என்னுஞ் சொல் ஆதாரமற்றதன்று. அதனைச் சீர்ப்படுத்துதற்கு அல்லது தனி நிலையங் காணுதற்கு நாம் முயல்வதே நேர்மையாகும். அவ்வாறன்றிப் பார்ப்பனர் மீது கொண்ட சீற்றத்தால் கதரைக் கொளுத்துதல் அநீதியாகும். இம்மாதிரியான காரியங்களைச் செய்து நம்மியக்கத்திற்கு மாசு விளையாதிருக்கும்படி ஆங்காங்கு பாதுகாக்கவேண்டியது தலைவர்களின் கடமையாகும்.

---

## உள்ளூர்ச் செய்தி.

| | |
|---|---|
| தட்ப வெப்ப நிலை | அஉ டிக்ரீ |
| சென்னை உண்டியல் வட்டம் | 0-உ-ச |
| பவுன் விலை | 0—சகூ—எ |
| சீமை வெள்ளிக்கட்டி | இகூ—சஉ—0 |

விழா.—சென்ற வெள்ளிக்கிழமை இரவு, இவ்வூர் நகரச்சிவன் கோவிலும், கொப்புடை அம்மன் கோவிலிலும கடைசி வெள்ளி விழா சிறப்பாக நடைபெற்றது.

கல்வி அதிகாரிகள் வருகை:—சென்னை கல்வி டயரக்டர் திரு. ஜி. கிரீவ் அவர்களும் இராமனுதபுரம் ஜில்லா அதிகாரி திரு. டி. பி. கிருஷ்ணஸ்வாமி முதலியார் அவர்களும் சென்ற திங்கட்கிழமை யன்று காலை இவ்வூர் யஸ்.யம்.யஸ். ஹைஸ்கூலையும் மீனாட்சி பெண்பாடசாலையையும் பார்வையிட்டனர்.

முனிசிபல் கூட்டம்:—பிப்ரவரி கஅ-உ சனிக்கிழமை மாலை ச-மணிக்கு இவ்வூர் முனிசிபாலிடியின் ஸ்பெஷல் மீட்டிங் நடைபெறுமென்றும் அவ்வமயம் சுங்கம் வசூல், குப்பை முதலியவற்றை அப்புறப்படுத்தல், முனிசிபாலிடியைச் சேர்ந்த கடைகளையும் கட்டிடங்களையும் வாடகைக்கு விடுதல் முதலியவை சம்பந்தமான குத்தகை ஏலம் நடைபெறுமென்றும், மற்றும் பல விஷயங்கள் ஆலோசிக்கப்படுமென்றும் அறிவிக்கப்படுகிறது.

---

## கப்பற் செய்தி.

கப்பல்கள் நாகபட்டினத்திலிருந்து மலாய் நாட்டிற்குப் பிரயாணமாகும் விபரம் வருமாறு:—

| | |
|---|---|
| ரோகிணு | பிப்ரவரி உசவ |

கப்பல்கள் மலாய்நாட்டிலிருந்து நாகபட்டினம் வந்துசேரும் விபரம் வருமாறு:—

| | |
|---|---|
| ரஜூலா | பிப்ரவரி உஎ—வ |

புதுச்சேரியிலிருந்து கப்பல்கள் சிங்கப்பூர், செய்கோன் முதலிய விடங்களுக்குப் பிரயாணமாகும் விபரம் வருமாறு:—

| கப்பல் | புறப்படும் தேதி. |
|---|---|
| ஸி. யம். மெயில் | |
| ஹால் | பிப்ரவரி உரு—வ |
| சாண்டில்லி | மார்ச் உ0—வ |
| அலே ஸிரிடியு | ஏப்ரல் கஎ—வ |
| அம்பாயிஸ் | மே கரு—வ |
| கம்பெயின் | ஜூன் கஉ—வ |

---

## தந்திச் செய்தி.

செய்கோன், மாசி உ-வ

| | |
|---|---|
| உண்டியல் விலை | நூற்று முப்பத்து நாலு. |
| சிங்கப்பூர் வட்டம் | பதினறு. |

இரங்கூன், மாசி உ-வ

| | |
|---|---|
| தவணைவட்டி | 0—கஉ—சு |
| பழையபவுன் | கரு—கரு—சு |
| புதியபவுன் | கரு—கக—சு |
| பெரியமில் அரிசி | ருகூஉ, ருகூரு, ருகூஅ |
| யஸ். குயு. அரிசி | ருரு0 |
| சிறிய மில் அரிசி | சகரு |
| மீடான் அரிசி | சஉரு |

வெளியூர் விலைகள்:—

| | |
|---|---|
| பிப்ரவரி | ருகூஉ, ருகூஅ |
| மார்ச் | ருகூரு |
| ஏப்ரல் | ச00 |
| படருநெல் | கசுஉ, கசுரு |
| ரயில் நெல் | கருசு, கருகூ |

---

## தீண்டாமை விலக்கு மகாநாடு.

சென்னை மாகாண இரண்டாவது தீண்டாமைவிலக்கு மகாநாடு சென்ற சனிக்கிழமை மாலை ரு மணிக்கு சென்னை பச்சையப்பன் மண்டபத்தில் ஸ்ரீமதி ஜொதிர் மாயி காங்குலியின் தலைமையில் நடைபெற்றது. திரு. ஏ. ராமசாமி முதலியார் மகாநாட்டுக் கொடியைப் பறக்கவிட்டார். மறுநாள் பலவிதத் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.



அருப்புக்கோட்டை

# ஜீவகாருண்யப் பிரசார சபை ஆண்டு நிறைவு விழா.

(நமது நிருபரிடமிருந்து)

அருப்புக்கோட்டை ஜீவகாருண்யப் பிரசார சபையின் உ-வது ஆண்டு நிறைவு விழா, சென்ற திங்கட்கிழமை இரவு, நாடார் ஹைஸ்கூல் ஹாலில், காரைக்குடி 'குமரன்' ஆசிரியர் திரு. சொ. முருகப்ப செட்டியாரவர்கள் தலைமையில் நடைபெற்றது. மாலை ரு-மணிக்கு விழாத்தலைவர், அவர் ஜாகையிலிருந்து இரண்டு குதிரை கட்டிய ரதத்தில் மேளவாத்தியத்துடன் ஊர்வலமாக ஹைஸ்கூல் ஹாலுக்கு அழைத்துச் செல்லப்பட்டார். ஏராளமான ஜனங்கள் ஊர்வலத்திற் கலந்துகொண்டனர். ஆங்காங்கே பல அன்பர்கள் தலைவருக்குமாலையிட்டு உபசரித்தார்கள். 'சுயமரியாதைக்கு ஜே!' என்ற கோஷத்துடன் ஊர்வலம் சுமார் எ மணிக்கு ஹைஸ்கூல் ஹாலை அடைந்தது. ஹால் பலவித கொடிகளுடனும் வளைவுகளுடனும் அலங்கரிக்கப் பட்டிருந்தது. எண்ணற்ற ஜனங்கள் கூடியிருந்தனர். சப்ரஜிஸ்திரார் திரு. எ. சோமசுந்தரம் பிள்ளை, கவுரவ மாஜிஸ்திரேட் திரு. க. வீரபத்திரச்செட்டியார், ந. எ. ஷண்முகசுந்தரம் பிள்ளை, சாது கந்தசாமி நாடார், மதுரை திரு. ப. ரா. முத்துசாமி நாடார், 'நாடார் குலமித்திரன்' ஆசிரியர் திரு. கு. ஆ. முத்து நாடார், தீண்டாமை வீரர் திரு. வீரப்ப செட்டியார், அருப்புக்கோட்டை யூனியன் போர்டு மெம்பர்களான திரு. என். எஸ். பழனிச்சாமி நாடார், திரு. குருசாமிக் குடும்பன், திரு. கல்யாணி செட்டியார், திரு. வீ. வெங்கட்சாமி நாயுடு, திரு. அரு. சித. சிவசுப்பிரமணிய முதலியார், சாலிய மகாஜன சங்கக் காரியதரிசி திரு. உ. அ. சுந்தரலிங்கம், அகம்படியர் மகாஜன சங்கக் காரியதரிசி திரு. சங்கரலிங்கத்தேவர் முதலியோர் வந்திருந்தோரிற் குறிப்பிடத் தக்கவர். ஜீவகாருண்யப் பிரசாரத்திற்காக அரும் பாடுபட்ட திரு திருமேனிநாதர் அவர்களுடைய படம் ஓர் பக்கம் வைக்கப்பட்டிருந்தது. திரு. பால்சாமி அவர்கள் கடவுள் வணக்கம் பாடியதும், திரு. அ. கு. சித. சிவசுப்பிரமணிய முதலியாரவர்கள் பிரேரிக்க, திரு. கெ. பொன்னையா நாடாரவர்கள் ஆதரிக்க, திரு. க. சி. வீ. கல்யாணி செட்டியாரவர்கள் ஆமோதிக்க, நீண்ட கரகோஷத்தினிடையே தலைவர் தலைமை ஆசனத்திலமர்ந்தார்.

### தலைவர் முகவுரை.

அப்பால் விழாத் தலைவர் முன்னுரையாகப் பேசியதன் சுருக்கம் வருமாறு:—

அன்புடைச் சகோதரர்களே!

ஜீவகாருண்யப் பிரசார சபையின் சார்பாக நடத்தப்படும் இவ் விழாவில் அன்பு நிறைந்த உங்களுடன் கூடியிருக்கும் சந்தர்ப்பம் கிடைத்திருப்பதை ஒரு பெரும் பேறாகக் கருதுகின்றேன். இந்த விடத்தில், ஜீவகாருண்யத்திற்காகப் பல நாள் பட்டினி யிருந்த ஒரு பெரியவருடைய ஞாபகார்த்தப் படம் வைக்கப் பெற்றிருப்பது என்னை மகிழ்ச்சிக் கடலாடச் செய்கின்றது. உங்களது ஜீவகாருண்ய உணர்ச்சி உலக தர்மத்தை நிலை நிறுத்தி எவ்வளவு தூரம் வளர்ச்சி பெற்றிருக்கின்றதென்பது இவ்வொரு செயலிலிருந்தே நன்கு விளங்குகின்றது. மக்கள் நல்வாழ்வு வாழ்வதற்கு முக்கிய காரணமாகவுள்ளது உலகதர்மம் தான். ஜீவகாருண்யமில்லாவிட்டால் உலக தர்மம் நிலை நிற்க முடியாது. மக்கள் விலங்குகளாகி அடியோடு மாண்டு போவார்கள் (கேளுங்கள், கேளுங்கள்).

### ஜீவகாருண்யம்.

ஒரு ஜீவன் மற்ற ஜீவன்களிடத்தில் அன்பு கொள்வதே ஜீவகாருண்யமெனப்படும். கடவுள் மக்களிடத்தில் காட்டும் அன்பு கருணையென்றும், மக்கள் கடவுளிடத்தில் காட்டும் அன்பு பக்தியென்றும் கூறப்படும். கடவுள் ஏன் உலகில் மக்களைப் படைத்து அவர்களுக்குச் சகல போக பாக்கியங்களும் கொடுத்துப் பாதுகாக்கிறார்? இதனால் அவருக்கு ஏதாவது பிரதிப் பிரயோசன முண்டோ? ஒன்று மில்லை. எல்லாம் அன்பினாலேயே, அவர் சுரக்கும் அருள் வெள்ளப் பெருக்கே மக்களுக்கு இன்பவாழ்வைக் கொடுக்கின்றது. அவர் ஜீவகாருண்யத்தைக் காட்டாராயின் மக்கள் கதி என்னவாகும்? தாய் பிள்ளையிடம் ஒரு நிமிட நேரம் அன்பு செலுத்தாவிட்டால் அப் பிள்ளையின் கதி என்னவாகும்? அப்பிள்ளைக்கு வயது வந்தால் தாய்க்குப் பல இன்னல்களைச் செய்யக்கூடும். இதை நினையாமல் அவள் அப்பிள்ளையைப் பாராட்டிச் சீராட்டி வளர்க்கின்றாள். அதற்கு நோய் வந்தால் தான் மருந்துண்டும், இராப் பகலாக விழித்திருந்தும் காப்பாற்றவேண்டிய அவசியமென்ன? தாழ்ந்தோரிடத்தில் உயர்ந்தோர் காட்டவேண்டிய கருணையும் இதுவே யாகும். இதே தத்துவத்தில் தான் சொத்துடையவர் ஏழைகளைக் காப்பாற்ற வேண்டுமென அற நூல்கள் கூறுகின்றன. மகாத்மா காந்தி தர்மோபதேசஞ் செய்யவேண்டிய காரணமென்ன? அவருக்கிருக்கும் செல்வாக்கிலும் புகழிலும் அவருடைய சொந்த நலத்திற்காக எவ்வளவோ காரியங்களைச் செய்யலாம். தம் சொத்தெல்லாவற்றையும் தத்தஞ் செய்துவிட்டு அவர் ஏன் முழங்கால் துணியுடன் ஆண்டியாய்த் திரியவேண்டும்? அவருக்குச் செய்யப்படும் கைம்மாறென்ன? ஜீவகாருண்ய மூன்ன மகான்கள், நல்ல அறிவு பெற்றவர்கள், மக்களை நல்லவர்களாக வாழச்செய்வது தான் தங்கள் ஊழியம் எனக் கொள்கின்றனர். உலகில் கணக்கற்ற ஜனங்கள் பிறந்திறக்கின்றார்கள். அவர்கள் யாவருடைய சரித்திரமும் ஏன் எழுதப்படவில்லை? அவர்கள் யாவருடைய பெயர்களும் மக்கள் மனத்தில் ஏன் பதிகிறதில்லை? எவரெவர் ஜீவகாருண்யத்துடன் தொண்டாற்றி உலக மக்கள் உய்ய வழி தேடுகின்றார்களோ அவர்களுடைய புகழ் மட்டுமே நீடித்து நிலைக்கின்றது. இத்தகைய ஜீவகாருண்யத்தைத் தான் பிரசாரஞ் செய்ய வேண்டுமென நமது பெரியார் கூறிப்போந்தனர். சைவ வைணவ நூல்களிலும் பிற நூல்களிலும் இக்காரணம் பற்றியே ஆடு, கோழி முதலிய ஜீவன்களை வதை செய்தலாகாதெனக் கூறப்பட்டிருக்கிறது. நாடு முழுவதும் இப் பிரசாரம் இனிது பரவவேண்டுவது அவசியம். எம் மதத்தினரும் பொதுவானதென ஒப்புக்கொள்ளும் திருக்குறளில் 'அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்' யெனக் கூறப்பட்டிருக்கிறது. கொல்லாமையே சிறந்த தர்மம் என்பது இதன் கருத்து. தாயுமானரும் 'கொல்லா விரதம் குவலயமெல்லா மோங்க, எல்லார்க்குஞ் சொல்லுவ தென்னிச்சை' யெனக் கூறிப்போந்தார். எல்லாப்பற்றுகளையும் விட்டு விட்டேனென்று கூறும் தாயுமானவரும் தமக்கு ஒரு இச்சை இருப்பதாகக் கூறுகிறார். அதுதான் ஜீவகாருண்யப் பிரசாரம். இன்னும் 'கொல்லா விரதம் ஒன்று கொண்டவரே நல்லோர், அல்லாதார் யாரோ அறியேன்' என அவரே அடுத்தபடியாகக் கூறுகிறார். கொல்லா விரதத்தைக் கைக்கொள்ளாதவர்களை யாவரென அழைப்பதென அவர்க்குப் புலப்படவில்லை. தமிழில் உள்ள எந்த நூலை எடுத்தாலும் அதில் ஜீவகாருண்யத்திற்கு ஆதாரவுண்டு.

### புலாலுணவு.

யுக்தி, அனுபவ பூர்வமாகப் பார்த்தாலும் மரக்கறி உணவைக்காட்டிலும் புலாலுணவு நல்லதென ரூபிக்கமுடியாது; வேதத்தில் புலாலுணவுக்கு ஆதாவிருப்பதாக ஒரு நண்பர் சொன்னர். ஒரு உபநிஷத்தில், ஆண்மையும் பலமும் அறிவும் பொருந்திய ஆண்மகனைப்பெற, கர்ப்பதானமாவதற்குச் சில தினங்களுக்கு முன், புதிய மாமிசத்தையும், புதிய வெண்ணெயையும் சாப்பிடவேண்டுமெனக் கூறப்பட்டிருக்கிறது. சாஸ்திரத்திற் கூறப்பட்டிருந்த போதிலும், அது யுக்திக்கும் அனுபவத்திற்கும் பொருத்தமாயிருக்கிறதாயென்றும் பார்த்துக்கொள்ள வேண்டும். பொருத்தமாயில்லாவிட்டால் விட்டுவிடலாம். புலாலுணவில்லாத குலத்திற் பிறந்த குழந்தைகள் நல்ல பலமுள்ளவையாயிருக்கின்றன. இதைச்சிந்தித்துப் பாருங்கள். புலாலுண்பதால் மட்டும் ஒரு மனிதன் திடகாத்திரனுயிருக்க முடியுமா? சுயராஜ்யப்போருக்குப் புலாலுணவுவேண்டுமென இன்னொரு நண்பர் கூறினர். புலாலை நிரம்பச் சாப்பிடுவதனுல், ஒரு தேசத்திற்குப் பல மேற்படுமென்று சொன்னால், அது தேசத்தின் அறியாமையையும், கீழான நிலையையுந்தான் குறிக்கும். புலாலுண்ணுத பார்ப்பனர் தந்திரசாலிகளாகவும், பிறரை ஏமாற்றித் திரிபவராகவும் ஆய்விட்டனர். ஆகையால் புலால் தின்னவேண்டுமென்றும் நண்பர் கூறினர். ஆனல் புலாலுண்டதாலேயே, நாம் அவர்களுடைய சூழ்ச்சிக்குள் அகப்பட்டு ஏமாந்தோம் எனப்பதிலிறுத்தேன். இவ்விஷமாகப்பேசிப் பயனில்லை. மேனாட்டிலுள்ள அறிஞர்களும், தமது ஆராய்ச்சியால் உடல் வளர்ச்சிக்குப் புலாலுணவு அவசியமில்லையென்றே கூறியிருக்கின்றனர்.

### கோயில் மதம்.

புலாலுணவு சாப்பாடமட்டில் நிற்கவில்லை. தெய்வத்துக்கும் அதற்கும் நெருங்கிய சம்சம்பந்தம் ஏற்பட்டுவிட்டது. நமது நாட்டு மக்களுடைய பக்தி எவ்வளவுதூரம் அழுகிப்போய்விட்டதென்பதை ரூபிக்க இது ஒன்றேபோதும். சுப்பிரமணிய பாரதியார் ஒரு இடத்தில், 'மை இடுவது கண்ணுக்கு அழகு; ஆனல் அளவு மீறி அதைக் கண்ணில் திணித்தால் கண் கெட்டுப்போகும்' எனக்கூறியிருக்கிறார். அதைப்போல, வேதத்துக்குஉரை எழுதப்போந்தவர்கள், தம்மனம் போனவாறு கண்டகண்டபடி விரித்தும் சேர்த்தும் எழுதிவிட்டனர். இதனுல் தேசம் பாழாய்விட்டது. நான்கு வேதங்களையும் கற்பாதவர் இந்துவல்லரென்பது இந்துமதக் கொள்கை. வேதத்தில் ஒரு விஷயத்தைப் பல்வேறு விதமாக அர்த்தம் பண்ணுவதற்கும் அருமையில்லை. அதை ஆதாரமாகக்கொண்டு பல்வேறு வித்தியாசமான, எதிரிடையான தத்துவங்களுடன் நூறுமதம் எப்படி உண்டாக முடியும்? பரமசிவன் அனுமானை வந்து இராமனைத் தூக்கிச் சென்றார் என்று வைஷ்ணவ மதம் கூறுகின்றது. விஷ்ணு காளைமாடாகவந்து பரமசிவனைச் சுமக்கிறார் என சைவமதம் கூறுகிறது. இரண்டிற்கும் ஆதாரவு வேதந்தான். வேதத்திற்கு நான்கு உரைகள் எழுதப் பட்டிருக்கின்றன. இவற்றிற்கப்பால் தயானந்த சரஸ்வதி தமது ஆரிய சமாஜக் கொள்கைகளுக்குத் தக்கபடி ஒரு உரை எழுதியிருக்கிறார். இவ்விதமாக ஒவ்வொருவரும தத்தம் கொள்கைகளுக்குத் தக்கபடி வேதத்தை மொழி பெயர்த்துப் பலவித வித்தியாசங்களைக் கிளப்பி விட்டனர். இத்தகைய வேதத்தைக் கட்டிக் கொண்டு ஏன் மதம், மதம் என அழவேண்டும்? புராணங்கள் வெறுங்கதைகள் தான். அவற்றில் கடவுளுணர்ச்சிகிடையாது. கோயிலில் கும்பிடுவதும கல்லைக் கும்பிடுவதும்தவிர வேறொன்று மில்லை. எங்கும் நிறைந்தவன். இருக்லனுப், நீயாய் நின்றவன் என்ற தத்துவம் பறந்து விட்டது. சங்கு, சக்கிரம், மான், மழு, விக்கிரகம் இவைதான கடவுள் என்ற காலைக் கொள்கை முற்றி விட்டது. இந்த விக்கிரகத்தை விட அந்த விக்கிரகம் பெரியது என்று கூடச் சொல்லப் படுகிறது. தூணிலும் துரும்பிலுமிருக்கிறார் என்ற விஷயம் போக விக்கிரகம் தான் கடவுள் என்ற நிலை வந்துவிட்டது. நாஸ்திகம், ஆஸ்திகம் என்று பேச அதிகாரம் பெற்றவர் நாஸ்திகம் யாரிடத்திலிருக்கிறதெனக் கவனிக்கிற தில்லை. கோவில் மததில் நன்மை ஏற்பட்டால் ஏற்றுக் கொள்வோம்; தீமை ஏற்பட்டால் தள்ளித் தானே விடவேண்டும். இடைக்காலத்தில் இதனால் ஏற்பட்ட தீமைகள் பலப்பல. இதன பயனால் தெய்வ உணர்ச்சி குன்றிவிட்டது. ஊர் தோறும் நூற்றுக்கணக்கான கோவில்கள் கட்டப் பட்டிருக்கின்றன; ஆயிரக் கணக்கான விக்கிரகங்கள் அமைக்கப் பெற்றிருக்கின்றன. இவ்வளவு தேவையா? இதைப்பற்றி யாருக்கும் உணர்ச்சி ஏற்படவில்லை, முன்னர் அறுபத்து மூன்று நாயன்மார்களென இருந்தது இப்பொழுது எழுபத்திரண்டாகக் கூடிவிட்டது. இவ்வெழுபத்திரண்டுக்கும் ஒரே நீளமாக ஒரு அற்றத்திலிருந்து மற்ற அற்றம்வரை ஒரு வேட்டி ஆணி அடிக்கப் படுகின்றது. இதிலிருந்து என்ன தெரிகின்றது? யோசித்துப் பார்த்தால் வருத்தம் உண்டாகும். இந்த நிலையில் போய்க் கொண்டேயிருந்தால் தேசத்தின் எதிர் காலம் என்னவாகும்? இது ஆஸ்திகமா? நாஸ்திகமா? மனிதர்கள் மூடத்தனத்தில் வீழாதிருக்கும்படி செய்வது ஜீவகாருண்யம். கோவில்களில் நடக்கும் அக்கிரமங்கட்கு அளவில்லை. உதாரணமாகக் குன்றக்குடிக் கோவிலை எடுத்துக் கொள்வோம். கோவில் மலையுச்சியி லிருக்கிறது. மேலே தண்ணீர் ஒன்றும் கிடையாது. கீழேயுள்ள அசுத்தங்களை யெல்லாம் மிதித்துக் கொண்டு தான் மேலே செல்ல வேண்டும். விக்கிரகத்துக்கு ஆயிரக்கணக்கான செலவுடன் பலவித நல்ல பொருள்களைக் கொண்டு அபிஷேகஞ் செய்யப்படுகிறது. பிள்ளை அழுதாலும், கன்றுக்குட்டி செத்தாலும் கவனியாது, குடக்கணக்கான பால் விக்கிரகத்தின் தலையில் கொட்டப்படுகின்றது. இவையெல்லாம், பூசாரியின் காலழுக்குடனும், அழுகிய பழத்தோல் முதலியவற்றுடனும் தீர்த்தத் தொட்டியில் விழுகின்றன. கும்பிடப் போகும் மூட ஜனங்கள் இதைப் பிடித்துத் தீர்த்தமெனக் குடிக்கின்றனர். இதைத் தான் இராமசாமி நாயக்கர் பார்ப்பனர் காலைக் கழுவி ஏன் குடிக்கவேண்டும் எனக் கேட்கிறார். பழனியில், இவ்வித அசுத்தத்தால் தான் காலரா உண்டாய்விட்டது.

### சிறு தேவதைகள்.

அறிவற்ற மக்கள் பலர், கடவுளைத் திருப்தி செய்யவெனச் சொல்லி ஜீவன்களை அறுக்கின்றனர். என்ன கொடுமை! வேதத்திலும் மனிதக் கொலை அனுமதிக்கப்பட்டிருக்கிறது. ஆட்டு யாகம், மாட்டு யாகம், குதிரை யாகம், மனித யாகம். இவற்றுள் மனிதயாகம் மட்டும் நின்றிருக்கின்றது. கருப்பண்ணசாமி போன்ற பல தேவதைகள் மூலை முடுக்குகளிலெல்லாம் இருக்கின்றன. இவற்றைப்பற்றிய சரித்திரங்கள் வேடிக்கையாயிருக்கும். மனிதன் ராமேஸ்வரத்திற்குப்போய்ப் பிறப்பது போல இதுவும் மக்கள் மூடத்தனத்தால் பிறக்கிறது. மனிதனுடைய நெறியைப் பற்றிக் கூறும்போது, மனிதன் மட்டும் கடவுளை உண்டாக்குகிறான் என ஒரு மேனாட்டுப்புலவர் கூறியிருக்கிறார். 'தினற்பொருட்டாற் கொல்லா துலகெனின் யாரும், விலைப்பொருட்டானூன்றருவாரில்' எனக்குறள் கூறுகின்றது. உண்பதுதான் இத்தகைய மூடத்தனத்திற்குக் காரணம். சிங்கம், புலி இவற்றைப் பலியிடக்கூடாதா? பாவமற்ற ஏழைப்பிராணிகளை ஏன் கொல்ல வேண்டும். சாப்பிடத்தான். இதை அடியோடு அழிக்கவேண்டும். தேவதைக்குப் பலியிடுவதில் பல விதங்களிருக்கின்றன. அறுப்பது, ஒரே வெட்டாக வெட்டுவது, நெஞ்சைப் பிளந்து குட்டி பெறுப்பது, மூளை சிதற மண்டையிலடித்தல். இவையெல்லாம் சாதாரணமாக கேட்கக் கூடியவை.

### உயிர்ப்பலி.

மனிதன் எவ்வளவு தூரம் பிற்போக்கடைந்து விட்டானென்பது இதினின்றும் விளங்குகிறது. இவ்வளவு அக்கிரமஞ் செய்பவர்களுக்கு மதம், சுவாமி, இவை எதற்கு? ஜீவகாருண்யப் பிரசார சபைகள் ஊர்தோறும் தோன்ற வேண்டும். உயிரில் தாழ்வு, உயர்வு இருக்கிறவரை தேசத்திற்கு நல்வாழ்வும், சுயராஜ்யமும் கிடையா. ஆடு கோழி குஞ்சுகளை இவ்வளவு தூரம் துன்பப்படுத்தவேண்டிய காரணமென்ன? சிறு குட்டிக்கும், சிறு குழந்தைக்கும் பேதமென்ன? குலாட்டைப் பிளப்பதற்கும், கர்ப்பமான பெண்ணைப் பிளப்பதற்கும் வித்தியாசமென்ன? அப்படிச் செய்ய மனம் வருமா? உயிரென்ற உணர்ச்சி சிறிதுமின்றிக் கொடூர நெஞ்சுடன், வயிற்றைப் பிளந்து குட்டியை பெறுப்பது சுவாமிக்குப் பிரீதியாம்! என்ன பழமை!

சம்? கடவுளுக்கு யாரிருந்தாலென்ன? கடவுளை ஏமாற்றுகிறதைத் தவிர வேறில்லை. கடவுளுக்குப் பிரீதியென்ற உணர்ச்சி வந்ததும், ஜீவகாருண்யம் அற்று விட்டது. ஆட்டைப் பிடித்து அறுக்கிறவன் ஏன் மனிதனை அறுக்கமாட்டான்? பெரும் பணக்காரர்கள் ஏழை யெளியவர்களெனச் சிறிதும் இரக்கம் கொள்வதில்லை. தம்மைவிடத் தாழ்ந்தவரை எதுவுஞ் செய்யலாமென்பது இயற்கை யாகிவிட்டது. இதை யெல்லாம் அடியோடு ஒழிக்கவேண்டும். கடவுளுக்கு முன்னால் இவ்விதமான அநியாயத்தைச் செய்யலாகாதென்ற உணர்ச்சி ஏற்படவேண்டும்.

## தீண்டாமை.

கோயில்களினால், முன்னேற்றத்திற்கு ஏற்படும் தடைகள் பலப்பல. இழிந்தோர் என ஒரு கூட்டத்தார் ஒதுக்கப்படுகின்றனர். கடவுள் யாவருக்கும் பொது. அவர் சக்தியால் தான் எல்லாம் நடக்கிறது. அப்படியானால், கடவுள் சக்தியால் பிறந்த பஞ்சமன் ஏன் ஒதுக்கப்பட வேண்டும்? இதில் ஏதாவது பொருளிருக்கின்றதோ? மூடத்தனத்தைத் தவிர வேறில்லை. இதை எடுத்துச் சொல்லப் போனால் சண்டை கிளம்புகிறது. நாஸ்திக அமபு தொடுக்கப்படுகிறது. யாவருக்கும் பொதுவாயிருக்கும் கடவுள் ஒரு குலத்தாருக்குமட்டும் எப்படி கருணை காட்டாதிருக்கமுடியும்?

இத்தகைய அநீதிகளைக் கடவுள் பெயரைச் சொல்லிச் செய்துகொண்டு, ஏமாற்றித்திரியும் ஜனங்களுக்கு சுயராஜ்யம யார் கொடுப்பது? ஆட்டை வெட்டி வெற்றி பெறும் மக்கள் சுயராஜ்யத்தையும் அவ்விதம் ஏன் பெறக்கூடாது? மிஸ் மேயோ எழுதிவிட்டதற்காகப் பலர் கொதித்தனர். அவள் கூறியவை முற்றும் உண்மையே. மரியாதையுடன் ஒப்புக்கொள்வதைத் தவிர வேறு வழியில்லை. முற்றும் ஆதாரத்துடனேயே எழுதப்பட்டிருக்கிறது. இத்தகைய பழிச்சொல்லையும் இழிச் சொல்லையும் போக்குவது இளைஞர்கள் கடமையாகும், இம்முயற்சியில் ஈடுபட்டிருக்கும் இச்சபையாரை நான் போற்றுகிறேன்'.

பின்னர் திரு. சுப்பிரமணியம் அவர்களால் தலைவருக்கு வந்தனோபசாரப் பத்திரம் வாசித்துக்கொடுக்கப்பட்டது. சென்ற வருடங்களில் சபை செய்திருக்கும் வேலையைப் பற்றியும், இனிச்செய்ய வேண்டிய வேலைத்திட்டத்தைப்பற்றியும் சபைக்காரியதரிசி விரிவாகக்கூறி, யாவரும் ஒத்துழைக்க வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார். பின்னர் திரு. கறுப்பையா பிள்ளையவர்களும், திரு. சொக்கலிங்கப் பாண்டியனவர்களும் காலஞ்சென்ற திரு. திருமேனி நாதரியற்றிய அருந்தொண்டைச் சிறப்பித்தும், சுயமரியாதைத் தத்துவத்தை விளக்கியும் பேசினர். அப்பால் சங்கத்திற்குப் புதிய வருட உதயோகஸ்தர்கள் தேர்ந்தெடுக்கப் பெற்றனர்.

பின்னர் தலைவர் முடிவுரையுடனும் நன்றி கூறலுடனும் விழா சுமார் ௧௦ மணிக்கு இனிது முடிவுற்றது.

—

(௭-ம் பக்கம் தொடர்ச்சி)

திறந்து முக்கியமான ஸ்தாபனங்களுக்குப் பெரிய வீதிகளில் இடங்கொடுத்து மற்றவற்றை விற்றுவிடலாம். இதனால் நமக்கு நன்றும் நஷ்டம் வரப்போவதில்லை. பிற்காலத்தில் ஊர் மிக அலங்காரமாக இருக்கும்.

தீர்மானம் ஏகமனதாய் நிறைவேறியது.

## மற்ற தீர்மானங்கள்.

வீட்டு வரி ஸ்பெஷல் ஆபீசரும், அவருடைய சிப்பந்திகளும் இன்னும் ஒரு மாதம் தொடர்ந்து இருக்கும்படி தீர்மானிக்கப்பட்டது. தொழில வரி அப்பீல் கமிட்டியாருடைய சிபார்சுகள் ஒப்புக்கொள்ளப்பட்டன. பில் கலக்டர்களுக்கு இரு நூறு ரூபாய் ஜாமீன் வாங்கவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. சுகாதார வாரக் கொண்டாட்டத்திற்கு நூறு ரூபாய் சாங்க்ஷன் செய்யப்பட்டது.

—

## நோட்டீஸ்.

தேவகோட்டை டி. மு. கோர்ட்டு

1929 ம் வருஷம் O. S. நிம்பர் 25

மலைசு. சுப்பிரமணி அய்யர்—வாதி

கு. ப. சி. த. சிதம்பரம் செட்டியார்—பிரதி வாதி.

இந்த நிம்பரில் தாவாப்படும் சொத்து வாதி உள்பட தாமாசனம் கழணிவாசல் கிறுமம் பங்காளிகள் மகாஜெனமகள் எல்லோருக்கும் சமுதாய பாத்தியமான பொதுச் சொத் தென்றும் அதில் பிரதி வாதிக்கு எவ்வித பாத்தியமு மில்லை என்றும் டிக்லரேஷன் பெறவும் பிரதி வாதி ஷை இடத்தில் மேல் கொண்டு எவ்வித அக்கிறமச் செயகையும் செய்யாதபடி சாசுவத இன்சங்க்ஷன் பரிகாரம் பெறவும் மற்றவித மாகவும் வாதி தனக்காகவும் கழணிவாசல் கிறுமம் மகாஜென பங்காளிகளுக்கு பிரதி நிதி ஸ்தானத்திலும் பிராது செய்ய அனுமதி கோரி 1 A of 29 ல் வாதி தரப்பில் மனுக் கொடுத்து 28-2-29 வாயிதா யேர்ப்படிருக்கிறது ஷை விஷயமான யேதாவது ஆக்ஷேபணைகள் உள்ள வர்கள் கோர்ட்டில் ஆஜராகி தங்கள் ஆக்ஷேபணைகளை தெரிவித்துக் கொள்ளும்படி இதன் மூலம் அறிவிக்கப் பட்டிருக்கிறது.

M. R. Sivarama Iyer,
(315) Vakil.

தேவகோட்டை 6—2—29

—

## நோட்டீஸ்.

தேவகோட்டை டி. மு. கோர்ட்டு

1929 வருஷம் O.S நிம்பர் 24

மலைசு. சுப்பிரமணிய அய்யர் வாதி

மெ. செ. சொக்கலிங்கம் செட்டியார்—பிரதிவாதி.

இந்த நிம்பரில் தாவாப்படும சொதது வாதி உள்பட தர்மாசனம் கழணிவாசல் கிறுமம் பங்காளிகள் மகாஜெனமகள் எல்லோருக்கும் சமுதாயப் பாத்தியமான பொதுச் சொத் தென்றும் அதில் பிரதி வாதிக்கு எவ்வித பாத்தியமு மில்லை யென்றும் டிக்லரேஷன் பெறவும் பிரதிவாதி ஷை இடத்தில் மேல் கொண்டு எவ்வித அக்கிறமச் செய்கையும் செய்யாதபடி சாசுவத இஞசங்க்ஷன் பரிகாரம் பெரவும் மற்ற விதமாகவும் வாதி தனக்காகவும் கழணிவாசல் கிறுமம் மகாஜெனம் பங்காளிகளுக்கு பிரதி நிதியாகவும் பிராது செய்ய அனுமதி கோரி 1 A8 6. Of 29 ல் வாதி தரப்பில் மனுக் கொடுத்து 28. 2·1929 உ வாயிதா யேர்ப்பட்டிருக்கிறது. ஷை விஷயமாய் யேதாவது ஆக்ஷேபணைகள் உள்ளவர்கள் கோர்ட்டில் ஆஜராகி தங்கள் ஆக்ஷேபணைகளை தெரிவித்துக் கொள்ளும்படி இதன் மூலம் அறிவிக்கப் பட்டிருக்கிறது.

M. R. Sivarama Iyer,
Vakil.

தேவகோட்டை
6—2—29.

—

## நோட்டீஸ்

—:o:—

தேவகோட்டை டி. மு. கோர்ட்டு

1928 S. C. No 499.

நா. வி. நா. நாச்சியப்ப செட்டியார் } வாதி.

நாருபணசாமி செட்டி .... பிரதிவாதி.

வாதிக்குப் பிரதிவாதி முன் நோட்டுக் கணக்கும் கைமாத்துக் கணக்கும் பார்த்து தரவேண்டியது ரூ. 57-0-0 க்கு 28—11—25ல் எழுதிக் கொடுத்திருக்கும் புரோநோட்டின் பேரில் ரூ 77—7—9க்கு வியாஜியம் போட்டு 2-3-2-29 ஈறங்கி வாயிதா ஏற்பட்டிருப்பதால் அன்று பகல் 10-மணிக்கு ஷை கோர்ட்டில் ஆஜராகி பிரதிவாதிக்குள்ள ஆக்ஷேபணையைத் தெரிவித்துக்கொள்ள வேண்டியது. தவறினால் ஒருதலை பக்ஷமாக தீர்ப்பு செய்யப்படும். (314)

தேவகோட்டை 10—2—29. } L Venkatarama Iyer
வாதி வக்கீல்.

—

## விளம்பரம்.

காரைக்குடி முனிஸிபாலிட்டி.

1929-30 வருடத்துக்கு கீழ் கண்ட காரைக்குடி முனிசிபல் குத்தகைகள் ஏலம் 1929௵ பிப்ரவரி ௴ 16௳ சனிக்கிழமை மாலை 4-மணிக்கு காரைக்குடி முனிசிபல் ஆபீசில் முனிசிபல் ஸ்பெஷல் மீட்டிங்கில் நடைபெறும்.

### குத்தகை ஏலங்கள் விபரம்.

1. சுங்கங்கள் வசூலிக்கும் பாத்தியதை.
2. ஸ்லாட்டர் அவுசில் ஆடுகள் அறுப்பதற்கு பீஸ் வசூலிக்கும பாத்தியதை.
3. (1-4-29 முதல் 31-3-1930 வரை) கூட்டி சேகரிக்கப்படும் குப்பை மல எருவு இவைகளின் ஏலம்.
4. முனிசிபாலிடியைச் சேர்ந்த கட்டிடங்களையும், கடைகளையும் வாடகைகு ஒப்புக்கொள்ளும பாத்தியதை.
5. முனிசிபாலிட்டிக்கு வேண்டிய விஷயங்களை அச்சடிக்க டெண்டர்கள்.
6. முனிசிபாலிடியைச் சேர்ந்த சாதாரண விளக்குகள் கிபாஸ் லைட்டுகள் இவைகளுக்கு எண்ணை சப்ளை செய்து ஏற்றுவதற்கு டெண்டர்கள்.
7. முனிசிபல் குப்பை வண்டிகளுக்கு மாடுகள் சப்ளை செய்ய டெண்டர்.

சேர்மென்,
முனிசிபல் கவுன்சில்.

—



—

## இந்திய சட்டசபை.

### போல்ஷிவிக் மசோதா.

பிப்ரவரி ௭-ம் தேதி கூடிய இந்திய சட்டசபையில், போல்ஷிவிக் மசோதாவைத் தனிக் கமிட்டிக் கனுப்புவதெனத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

—

## விளம்பரம்.

ராமனாதபுரம் ஜில்லா திருப்பத்தூர் தாலூகா கண்டவிராயம்பட்டியிலிருக்கும் வீர. அரு. பள. பழனியப்ப செட்டியார் இதனால் சகல ஜனங்களுக்கும் அறிவிப்பதாவது:—

எனக்கு இரண்டாம்தாரத்தில் 17 வயதுள்ள மைனர் ஜேஷ்ட குமாரன் பழனியப்பன் என்ற லெக்ஷ்மணன் செட்டி இருக்கிறான். எனக்கு சென்ற 4, 5 வருடங்களாக திருஷ்டி குன்றிப் போயிருக்கிறது. இந்த சந்தர்ப்பத்தில் என்னுடைய மகன் மைனரை சில துஷ்டர்கள் ஆசை வார்த்தை காட்டி புத்தியை பேதித்தும் தங்கள் வருதிககு கட்டுப்பட்டு நடக்கும்படி செய்து கொண்டும் ஏமாறறி துன்மார்க்க நடவடிக்கைகளில் கூட்டிவிட்டு ஷையானிடமிருந்து யாதொரு பிரதிப் பிரயோஜனமுமன்னியில் உண்டியல்களும் நோட்டு வகையறு தஸ்தவேஜிகளும் மோசமாக எழுதி வாங்கியிருப்பதாகத் தெரிகிறபடியாலும் ஷையான் என் குடும்பத்தில் கட்டுப்படாமல் ஷை துஷ்டர்களுடன் பல இடங்களில் சஞ்சரித்துக் கொண்டும் ஷையார்கள் துர்ப்போதனைக் குட்பட்டு கொண்டும் என் வருதிக்கு கட்டுப்படாமலும் இருந்துவருகிறான் ஷை யான் சுயபுத்தி இல்லாதவனும் தன செய்கைகளையும அவைகளின் பிரயோசனத்தையு ம தெரிந்து கொள்ள சக்தியற்றவனும் மைனராகவும் இருந்து வருகிறான. ஷையானுககு பாத்தியமுள்ள சொத்துகள் யாதொன்றுமில்லை. என்னிடமிருக்கும் யாவற்றுச் சொத்துக்களும் என்னுடைய சுயாஜித சொததுக்கள், ஷையானிடமிருந்து எவ்வித தஸ்தாவேஜுகளும் எழுதிவாங்கக் கூடாதெனறும அப்படி தஸ்தாவேஜிகள் எழுதி வாங்கியிருந்தாலும இனி எழுதி வாங்கினாலும் ஷை தஸ்தாவேஜிகள் செல்லததகக தல்லவென்றும் அவைகள் எனனுடைய சொத்துக்களை ஒரு விதத்திலும, கட்டுப்படுத்தாதென்றும இதனால் எல்லோருக்கும அறிவிக்கலாயிறறு.

வீர. அரு. பள. பளனியப்ப
செட்டியார்,

கண்டவிராயம்பட்டி
13—2—29.

# அடிகளின் உண்மைவாழ்வு.

## பகுதி—ரு.

### அத்தியாயம் சஉ.

கதர், இதற்கப்பால் முன்னேறியதைப் பற்றி விவரிக்க, வேறு அத்தியாயங்களை எடுத்துக்கொள்ளப் போவதில்லை. பொது ஜன கவனத்திற்கு வந்ததற்குப்பின், நான் எடுத்துக்கொண்ட பலதிறப்பட்ட முயற்சிகளை விவரிப்பது இங்கு அனுவசியமாகும். அப்படிச்செய்தால், இவ்விஷயத்தைப்பற்றிய தனிநூலாகிவிடும். இந்த அத்தியாயங்களை நான் வரைவதன் நோக்கம், உண்மையில் நான் செய்த சோதனைகளில் சில விஷயங்கள் எவ்விதம் தாமே தோன்றியதென்பதை விளக்குவதற்காக மட்டுந்தான். ஆகவே, மீண்டும் ஒத்துழையா இயக்கத்திற்குச் செல்வோம். அலி சகோதரர்கள் தோற்றுவித்த பலமான கிலாபத் கிளர்ச்சி வலுவுற்றிருக்கும்பொழுது, அஹிம்சையை ஒரு முஸ்லிம் எவ்வளவு தூரம் கையாளமுடியும் என்பதைப்பற்றி காலஞ்சென்ற மௌலானா அப்துல் பாரியுடனும், மற்ற உலமாக்களுடனும் விரிவாக ஆலோசித்தேன். அஹிம்சா தர்மத்தைக் கைக்கொள்வதை இஸ்லாம் தடுக்கவில்லையென்றும், அதைக்கைக்கொள்ள வேண்டுமென ஒரு தடவை உறுதிகொண்டு விட்டால், அவ்வுறுதி கடைப்பிடித்து உண்மையுடன் ஈடேற வேண்டுமென்றும் அவர்கள் யாவரும் கூறினார்கள். முடிவாக கிலாபத் மகாநாட்டில், ஒத்துழையாத் தீர்மானம் பிரேரேபிக்கப்பட்டது. நீண்டவாதத்துக்குப்பின் நிறைவேற்றப்பட்டது. இவ்விஷயத்தைப்பற்றி ஒரு கமிட்டி அலகபாத்தில் இரவு முழுவதுமிருந்து எவ்விதம் வாதஞ்செய்து கொண்டிருந்ததென்பது எனக்கு நல்ல ஞாபகமிருக்கிறது. அஹிம்சையுடன் ஒத்துழையாமை எவ்விதம் நடைமுறையில் சாத்தியமாகும் என்பதைப்பற்றி ஆரம்பத்தில், காலஞ்சென்ற ஹக்கீம் சாகிபுக்குச்சந்தேகமிருந்தது. அவரது சந்தேகம் தீர்ந்ததும், அவர் மிக முயற்சியுடன் அதற்காக வேலைசெய்தார். அவ்வியக்கத்திற்கு அவரியற்றிய தொண்டு அளவிடற்கரியதாகும்.

இதற்கப்பால் நடைபெற்ற குஜராத் தேசிய மகாநாட்டில் நான் ஒத்துழையாமைத் தீர்மானத்தைப் பிரேரேபித்தேன். காங்கிரஸுக்கு மேலான தீர்மானத்தை ஒரு மாகாண மகாநாட்டில் எடுத்துக்கொள்வது ஒழுங்கல்லவென ஆட்சேபம் கிளம்பியது. தாழ்ந்து போகும் இயக்கத்துக்குத்தான் இத்தகைய கட்டுப்பாடு உண்டென்றும், முன்னேறிக் கொண்டிருக்கும் இயக்கத்திக்கு அவ்விதம் கட்டுப்பாடு இல்லையென்றும் கூறினேன். மேலும், தீர்மானிப்பவர்களுக்குப் போதிய சக்தியும், நம்பிக்கையுமிருப்பின் அவ்விதம் செய்வது அவர்களுடைய கடமையாகுமென்றும் கூறி ஆட்சேபத்தை எதிர்த்தேன்; ஒருவர் தமது சொந்தப் பொறுப்பில் செய்ய முன்வந்தால் தலைமை நிலயத்தின் மதிப்பைப் பெருக்க யாதொருவிதமான அனுமதியும் வேண்டாமெனக் கூறினேன். பின்னர், தீர்மானத்தின் நல நஷ்டங்களைப்பற்றி ஆலோசிக்கப்பட்டது. முடிவாக வாக்குகள் கணக்கெடுக்கப்பட்டபோது, அதிகப்படியான வாக்குகளால் தீர்மானம் நிறைவேறி விட்டதெனத் தெரிந்தது. இவ்வெற்றிக்கு ஸ்ரீயுத வல்லபாயும், ஸ்ரீயுத அப்பாஸ் தியாப்ஜியும் முக்கிய காரணஸ்தர்கள். பின்னவர் தலைமை வகித்தார். சந்தர்ப்பம் கிடைத்தபோதெல்லாம் அவர் தீர்மானத்தை ஆதரித்தே வாக்களித்தார்.

இப்பிரச்சனையைப்பற்றி விவாதிக்க, கல்கத்தாவில் ௧௯௨0 செப்டம்பரில் விசேட காங்கிரஸ் கூட்ட வேண்டுமென அகிலஇந்திய காங்கிரஸ் கமிட்டி தீர்மானித்தது. பெரிய அளவில் ஏற்பாடுகள் நடைபெற்றன. லாலா லஜபதிராய் தலைவராகத்தேர்ந்தெடுக்கப்பெற்றார். பம்பாயிலிருந்து கல்கத்தாவுக்கு, காங்கிரஸ் கிலாபத் தனி வண்டிகள் பறந்தன. கல்கத்தாவில் பிரதிநிதிகளும், விஸிட்டர்களும் கணக்கற்ற தொகையினராய்க் கூடினார்கள். மௌலானா ஷவுகத் அலி கேட்டுக்கொண்டபடி, வண்டியிலேயே, ஒத்துழையாமைத் தீர்மானத்தைத் தயாரித்தேன். இதுவரை நான்எழுதிய நகல்களில், அஹிம்ஸை என்ற வார்த்தையை அனேகமாகக் குறிப்பிட்டதில்லை. ஆனால் எனது பேச்சுகளில் அடிக்கடி உபயோகித்தேன். இவ்விஷயத்தைப்பற்றிய அகராதி இன்னும் முற்றுப்பெறவில்லை. அஹிம்ஸை என்பதற்குச் சரியான சமஸ்கிருத வார்த்தையைக் கொண்டு மட்டும் முஸ்லீம்கள் கூட்டத்தில் முற்றும் விளக்கிவிட முடியாதென உணர்ந்தேன். ஆகவே, வேறொரு சரியான பதம் தரும்படி மௌலானா அப்துல்கலாம் ஆஸாதிடம் கேட்டேன். 'பா-அமன்' என்ற வாக்கையும், அதுபோல ஒத்துழையாமை என்பதற்கு 'தார்க்-இ-மவலட்' என்பதையும் கொடுத்தார்.

இவ்விதமாக, நான் ஒத்துழையாமைக்காக, ஹிந்தி, குஜராத்தி, உருது முதலிய பாஷைகளில் தகுந்த பதங்களைத் தேடிக் கொண்டிருக்கும் பொது, நடந்து கொண்டிருக்கும் காங்கிரஸில் ஒத்துழையாமைத் தீர்மானத்தை அமைக்கும்படி கேட்டுக் கொள்ளப் பட்டேன். நான் முதலாவதாக எழுதிய குறிப்பில் 'அஹிம்சா' என்ற பதம் விடப்பட்டது. நான் எழுதியதை அதே வண்டியில் பிரயாணஞ் செய்த மௌலானா ஷவுகத் அலியிடம் கொடுத்தேன். விடுப்பட்ட வாக்கைப்பற்றி அவர் கவனிக்க வில்லை. இரவில், பிழையைக் கண்டு பிடித்தேன். காலையில், குறிப்பு அச்சுக்குப் போகுமுன் பிழையைத் திருத்திக் கொள்ள வேண்டுமென மஹாதேவ மூலம் செய்தி அனுப்பினேன்; ஆனால் திருத்தப் படுவதற்கு முன் அது அச்சாகி விட்டதாகத் தோன்றுகிறது. அதே மாலையில் விஷயாலோசனைக் கமிட்டி கூட்டம் நடைபெற்றிருக்க வேண்டும். ஆகையால், அச்சான பிரதிகளில் அவசியப்பட்ட திருத்தங்களைப் பின்னர் செய்ய வேண்டியதாயிற்று. எனது குறிப்புடன் நான் தயாராயில்லாவிட்டால், அதிகக் கஷ்டம் ஏற்பட்டிருக்குமெனப் பின்னர் தெரிந்தது.

எனினும் எனது நிலைமை பரிதாபகரமாகவே யிருந்தது. எனது பிரேரணையை யார் ஆமோதிப்பரென்றும் யார் எதிர்ப்பரென்றும் தெரியவில்லை. லாலாஜி என்ன போக்கை அனுசரிப்பாரென்றும் எனக்குத் தெரியவில்லை. அனுபவமிக்க வீரர்கள் பலர் கல்கத்தாவில் யுத்தத்திற்காகக் கூடியிருந்தனர். டாக்டர் பெஸண்டு, பண்டித மாளவியாஜி, ஸ்ரீயுத விஜயராகவாச்சாரி, பண்டித மோதிலால்ஜி தேசபந்து ஆகியவர்கள் அவ்வீரர்களிற் சிலராவர்.

பஞ்சாப் கிலாபத் குறைகளை நிவர்த்திக்கவே, ஒத்துழையாமையைக் கைக்கொள்ள வேண்டுமென எனது தீர்மானத்தில் குறிக்கப் பெற்றிருந்தது. இது ஸ்ரீயுத விஜயராகவாச்சாரிக்குப் பிடிக்க வில்லை. 'ஒத்துழையாமையை ஆரம்பிக்க வேண்டுமானால் சில குறிப்பிட்ட குறைகளுக்காகவென ஏன் குறிப்பிட வேண்டும்? சுயராஜ்யமில்லாதிருப்பதே நாட்டுக் கிழைக்கப் பட்டிருக்கும் பெரிய தீங்காகும். ஆகையால், அதைப்பற்றியே ஒத்துழையாமை ஆரம்பிக்கப்பட வேண்டும்' என அவர் கூறினார். அவரது யோசனையை ஒப்புக் கொண்டு, சுயராஜ்யக்கோரிக்கையையும் எனது தீர்மானத்தில் சேர்த்துக் கொண்டேன். நீண்ட கோர விவாதத்திற்குப் பிறகு தீர்மானம் நிறைவேறியது. இயக்கத்தில் முதன் முதலாக மோதிலால்ஜியே சேர்ந்தார். தீர்மானத்தைப் பற்றி நாங்களிருவரும் நடத்திய ரசமான உரையாடல் இன்றும் ஞாபகத்திலிருக்கிறது. அவர் தீர்மான அமைப்பில் மாற்ற வேண்டுமெனக் கூறிய சில மாற்றங்களை ஒப்புக் கொண்டேன். தேசபந்துவைச் சேர்த்துக் கொள்ளும் வேலையை அவர் எடுத்துக் கொண்டார். தேசபந்து இயக்கத்தைப் பாராட்டிய போதிலும், திட்டத்தை நடத்திவைக்க ஜனங்களுக்குத் தகுதியில்லையென முரண்பட்டார்; நாகபுரிக் காங்கிரஸில் தான் அவரும், லாலாஜியும் அதை முழுமனதுடன் ஒப்புக் கொண்டார்கள்.

காங்கிரஸின் விசேடக் கூட்டத்தில் காலஞ் சென்ற லோகமான்யரில்லாதது பற்றி மிகவும் வருந்தினேன். லோகமான்யர் அக்காலத்தி லிருந்தால், அச்சந்தர்ப்பத்தில் அவருடைய ஆசீர்வாதங்களைப் பெற்றிருக்கலாம். அவர் மறுபக்கஞ் சேர்ந்து எதிர்த்திருந்தாலும், அவரது எதிர்ப்பை மதித்து, அது எனக்கு ஒரு பாடமாகுமெனக் கொண்டிருப்பேன். எங்களுக்குள் எப்பொழுதும் அபிப்பிராய பேதங்களிருந்து கொண்டிருந்தன. ஆனால் ஒருபொழுதும் கசப்பு உண்டாக வில்லை. எங்களுக்குள்ளிருந்த பாசம் மிக நெருங்கியதென்ற நம்பிக்கையை அவர் கொடுத்திருந்தார். நான் இதை எழுதும் பொழுது, அவரது மரணத் தருவாயில் நிகழ்ந்த சம்பவங்கள் எனது அகக்கண்முன் தோன்றுகின்றன. நள்ளிரவில் யாதவதாஸ் கம்பிமூலம் அவரது மரணத்தைத் தெரிவித்தார். அவ்வமயம் நான் எனது தோழர்களுடனிருந்தேன். உடனேயே 'எனது பலமான கோட்டை மறைந்தது' என்ற வாக்கியம் எனது நாவினின்றும் பிறந்தது. அவ்வமயம் ஒத்துழையா இயக்கம் மிக உன்னத நிலையிலிருந்தது. அவருடைய ஆதரவையும், ஊக்கத்தையும் எதிர்பார்த்துக் கொண்டேயிருந்தேன். ஒத்துழையாமையின் முடிவான தோற்றத்தைப் பற்றிய அவரது கருத்து வெறும் மனக் கோட்டையாகவே இருக்கும். ஆனால், அவரது பிரிவு கல்கத்தாவில் கூடியிருந்த ஒவ்வொருவருக்கும் ஆறாத்துயரத்தைக் கொடுத்தது, தேசசரித்திரத்தில் அக்காலத்தில் ஏற்பட்ட மிக சங்கடமான நிலையில் அவரது உயரிய புத்திமதியின் அவசியத்தை யாவரும் உணர்ந்தார்கள்.

வியாபாரத்திற்கழகு
விளம்பரமே.

தென்மாப்பட்டில்

## திரு. ப. சீவானந்தன் நிகழ்த்திய சொற்பெருக்கு.

(நமது நிருபரிடமிருந்து)

தென்மாப்பட்டு வைக்கம் வீரர்வாசகசாலை திறப்புவிழாவில் சிராவயல் காந்தி நிலையம் திரு. ப. சீவானந்தன் அவர்கள் நிகழ்த்திய சொற்பெருக்கின் சாரம் வருமாறு:—

அன்பர்களே! சகோதரிகளே!! சகோதரர்களே!!!

சுதந்திரம், சமத்துவம், சகோதரத்வம், முன்னேற்றம் ஆகிய உயரிய கொள்கைகள் அடங்கியிருக்கும் சுயமரியாதையை மக்களுக்கு உணர்த்தி நிற்கும் வைக்கம் வீரரின் சிறந்த கொள்கைகளை நான் உங்கட்கு எடுத்துக்கூற விரும்புகிறேன். நாட்டிற்குத் தற்காலம் மிகுதியும் வேண்டற்பாலது அறிவே. அறிவைப்பெற இத்தகைய வாசகசாலைகள் சிறந்த கருவிகளாயமைந்திருக்கின்றன. சுயமரியாதை இயக்கத்தி லீடுபட்டு உழைத்துவரும் அன்பர் திரு. சொ. முருகப்ப செட்டியாரவர்கள் இவ் வாசகசாலையைத் திறந்துவைத்து இதுகாறும் சுயமரியாதை இயக்கத்தின் கொள்கைகளைத் தெள்ளத்தெளிய விளக்கினர். இதுபோல் எத்தனையோ தடவைகளில், சுயமரியாதை இயக்கத்தின் தத்துவங்கள் விளக்கப் பட்டிருக்கின்றன. இவ் வூரிலேயே திருவாளர் ஈ. வெ. இராமசாமி நாயக்கர் அவர்கள் தமது உள்ளம் கனிந்த மொழிகளில் தமது கொள்கையை விளக்கியிருக்கிறார். இனிப்பேசவேண்டியது கிடையாது. பேசிப் பயனென்? கூட்டங்களைக் கூட்டுவதும், பேசுவதும், செவியாரக்கேட்பதும், கேட்டுவிட்டுப் போவதும் தவிர செயலில் ஏதாவது நடக்கின்றதா? மானமற்று, ஈனமற்று, ஊமையராய்ச் செவிடர்களாய் வாழ்கின்றோமேயன்றி சொல்லியபடிச் செயலிற் காட்டத் துணிகின்றோமில்லை. ஒரு சிறிதளவாவது செயலிற் காட்ட முன் வராவிட்டால், எத்தனை காந்தி, எத்தனை இராமசாமி நாயக்கர் தோன்றி ஆவதென்? எந்தக் கிளர்ச்சி நமது நாட்டில் தோன்றினாலும், ஆரம்பத்தில எல்லாம் தடபுடலாகவே இருக்கும். அப்பால் வாணவேடிக்கைகள்போன்று ஓய்ந்து ஓய்ந்து போவது வழக்கம். வாணத்தால் ஏற்படும் வெளிச்சத்தை நம்பி ஏதாவது செய்ய முடியுமா? ஆனால் மங்கலாயிருக்கும் மெழுகுதிரி வெளிச்சத்தில் எவ்வளவோ காரியங்களைச் செய்யலாம். முன்னையது கண்ணைப்பறிக்கும் ஒளியை ஆரம்பத்தில் கொடுத்த போதிலும், கணப் பொழுதில் மறைந்து போகும். அப்பால் எங்கும் இருட்டுத்தான். பின்னையது எவ்வளவு மங்கலாக ஒளி வீசிய போதிலும் நீடித்து நிற்கக்கூடியதாகும். செயலில் காட்ட முற்படவேண்டும், இந்த வாசகசாலையைத் திறந்ததன் பயன் அப்பொழுதுதான் விளங்கும்.

சகோதரர்களே! உலகம் முழுவதும் மிக உயர்ந்த நிலையிலிருக்கும் இக் காலத்தில், நமது இந்தியா மிகக் கீழ்மையான நிலையிலிருக்கின்றது. இந் நிலையைச் சீர்படுத்த வேண்டுமானால் சுதந்திரம் பெற வேண்டும் என்ற கொள்கையுடன் தேசிய இயக்கம் ஆரம்பிக்கப்பட்டது. அவ் வியக்கத்தில் மூழ்கிய ஊர்களில் இத் திருப்பத்தூரும் ஒன்றாகும். மகாத்மா காந்தி தலைமையில் நடைபெற்ற அவ் வியக்கத்தில் இவ்வூரார் பலரும் சேர்ந்து நாட்டிற்காகத் துன்பப்பட்டதுண்டு. அவ் வியக்கமும் இப்பொழுது படுத்து விட்டது. காங்கிரஸ் என்னும் தேசிய மகாசபை கூடுவதும் கலைவதுமாயிருக்கிறதேயன்றி செயலில் ஒன்றுமில்லை. திரு. இராமசாமி நாயக்கர் சொல்லிலும் செயலிலும் ஒன்று போல் நடக்கப்பட்டவர். அவரது இயக்கத்தின் முக்கிய கொள்கை, நாட்டில் தாண்டவமாடும் குருட்டு நம்பிக்கைகளையும் மூடபக்தியையும் அறவே ஒழிப்பதென்பதாகும். நம் நிலைமை அப்பொழுதுதான் சீர்படும். நம் நாடு அப்பொழுதுதான் முன்னேறும். பிற நாட்டார் கம்பியில்லாத் தந்தி கண்டுபிடிப்பதிலும், புகைப்பட ஆராய்ச்சி செய்வதிலும், செவ்வாய்க்கிரகத்திற்குச் செய்தி விடுப்பதிலும், விரும்பிய விடத்தில் மழை பொழியச் செய்வதிலும், வானத்தில் நூற்றுக் கணக்கான மைல் தூரம் பறப்பதிலும் தங்கள் கருத்தை நாட்டிப் பற்பல புதுமைகளைக்கண்டு பிடித்துக் கொண்டிருக்கும் பொழுது நாம் என்ன செய்கிறோம்? ஓர் பஞ்சமன் இந்தக்குளத்தில் தண்ணீர் எடுக்கலாமா, எடுக்கக்கூடாதா? ஓர் நாடார் இவ் வாலயத்தினுள் பிரவேசிக்கலாமா, பிரவேசிக்கக்கூடாதா? சூரியன் ஏறிச்செல்லும் ரதத்தை இழுக்கும் குதிரைகள் எட்டா, பதினாறா? திருநீற்றைக் குழைத்திட வேண்டுமா, குழைக்காது இடவேண்டுமா? இவைதான் நாம் செய்யும் ஆராய்ச்சி. இவ்வளவு இழிந்த நிலையில் நாமிருக்கின்றோம். கடவுள், சமயம், சாஸ்திரம் ஆகிய பெயர்களால் பார்ப்பான் நம்மைக் கெடுத்துவிட்டான். பார்ப்பனீயத்தை ஒரே அடியாக ஒழித்து விட்டாலன்றி நாட்டுக்கு மோட்சம் கிடைக்கப் போவதில்லை. நெற்றி நீர் நிலத்தில்வடிய உழைத்து, அதனால் கிடைக்கும் பொருளைப் பார்ப்பானுக்குக் கொடுக்க, அவன், வேதம், புராணம், இதிகாசம் என்ற பற்பல நூல்களில், நம்மை மிகக் கீழ்மைப்படுத்தித் தீட்டி நம் மிடையே பலலாயிரக்கணக்கான பிணக்குகளை உண்டு பண்ணியிருக்கிறான். இதுதான் இறைவன் படைப்பின் மாட்சியாம். எடுத்ததை யெல்லாம் தெய்வீகம், தெய்வீகம் எனச்சொல்லிப் பார்ப்பனர் ஏய்க்கின்றனர். பார்ப்பனரைப் பார்த்தாலோ அவர்களுக்குள்ளேயே பலவித வித்தியாசங்கள்—வடநாட்டுப் பார்ப்பனன் தென்னாட்டுப் பார்ப்பனரை விலக்குகின்றான். சைவ சமயத்தில் சேர்ந்தவன் ஸ்மார்த்தனை ஒதுக்குகின்றான். இவ்விதமாகப் பற்பல வகுப்புகள் தோன்றக் காரணமென்ன? இதிலிருந்து சாதி வேற்றுமையின் மூல தத்துவம் வெளிப்படையாகிறது.

எத்தினைகாலம்தான் சொல்லிக்கொண்டே யிருப்பது? செயலில் காட்டாதவரை ஒரு பயனுமேற்படப் போவதில்லை. ஆகவே வேலையாற் பயனில்லை; அழித்தல் வேலை செய்ய வேண்டுமென நமது வீரர் கூறுகின்றார். ஏன்? சமயத்திற்கும் பார்ப்பனர்க்கும் சம்பந்தம். பார்ப்பானைத் திட்டும்போது அவன் சமயத்திற் புகுகின்றான். சமயம் ஏன் குறுக்கிடுகின்றது? ஒரு கடவுளிருந்தால் இந்த வித்தியாசங்க ளெல்லாம் ஓடிப் போய்விடாதா? நமக்கு இன்னும் உணர்ச்சி வரவில்லை. உயர்ச்சி பெற வேண்டுமானால், அயர்ச்சி விட்டு, பயிற்சியில் தேர்ச்சி பெறவேண்டும். மேலும் ஒரு வகுப்பில்லை; கீழும் ஒரு வகுப்பில்லைஎன்பதுதான் திரு. இராமசாமி நாயக்கரது கொள்கை. பார்ப்பானைத் திட்டும் பொழுது மகிழ்ச்சிகொள்ளுகிறோம். ஆனால் அதே சமயத்தில் நம்மை மறந்து விடுகிறோம். எழு கோடி மக்களைத் தீண்டாதாரென ஒதுக்கிவைத்து விட்டு நாம் ஆங்கிலேயரிடம் சுதந்திரம் கேட்கின்றோம். நாம் கோடிக் கணக்கானவரை அடிமைப்படுத்தி வைத்துக்கொண்டு நம்முடைய அடிமைத்தனத்திலிருந்து நம்மை நாம் எப்படி விலக்கிக்கொள்ள முடியும்? தீண்டாமை ஒழிந்தால் தான் சுயமரியாதை உண்டாகும்.

ஒரே நாட்டில் பிறந்த ஒரு வகுப்பாரை ஒதுக்கிவைக்கும் இந்நாடு ஏன் பூகம்பத்திற் கிரையாகவில்லை? ஏன் கடல் கொள்ளப்படவில்லை எனக் கேட்கின்றேன். யாவரும் ஒன்று சேர்ந்துழைத்தாலன்றி, பாழான நிலையிலிருந்து மீள முடியாது. பெண்களை அடிமைப்படுத்தும் நீசத்தனம் ஒழியவேண்டும்.

கோயில்கள், கோயில்களெனக் கத்துகிறார்கள். 'அன்பே சிவம்' என்று அலறும் சமயம் என்ன செய்கின்றது? ஒரு கூட்டத்தாரை ஒட்டுகின்றது. எல்லாம் கடவுள் மயம் என்று கதறும் சமயம் என்ன செய்கின்றது. தூர நில் என்கின்றது. என்ன சமயம், என்ன கடவுள்? அயல் நாட்டு வெள்ளைக்காரன் சாமியைப் பார்க்கலாம். அவன் எங்கு வேண்டுமாயினும் செல்லலாம். சாமி அதன் பீடத்திலிருந்து எழுந்தாவது அவனண்டை வரலாம். ஆனால் நமது தேசத்தில் பிறந்த மக்கள், அந்தச் சாமியைத் தினந்தோறும் கும்பிட்டு மோட்சமடைய விரும்பும் மக்கள், பார்த்தலாகாது, கிட்ட வரலாகாது. என்ன கொடுமை! மருத்துவனிடத்தில் கூலியைக் கொடுக்கலாம்; அவனுடைய பிள்ளைகள் பள்ளிக்கூடத்தில் படிக்க இடங்கிடையாது! காலத்திற்குத் தக்கபடி முன்னேற வேண்டாமா? பண்டெழுதி வைத்தவர்கள் இன்றில்லையே. மனுஸ்மிருதி மட்டும் ஏன் தொங்கிக் கொண்டிருக்க வேண்டும்?

ஆகையால், சகோதரர்களே, நாம் முன்னேறவேண்டுமானால், உலகத்தார் நம்மை மக்களென அழைக்கவேண்டுமானால், பிற நாட்டாரைப் பார்த்தாவது நாம் சீர்திருத்தம் பெறவேண்டியது அவசியம். மூடப் பழக்க வழக்கங்களையும், அர்த்த மற்ற போலி ஆசாரங்களையும் இன்றே ஒழித்து விடுங்கள்.

—

### தீண்டாமையால் நேர்ந்த கொலை.

எதிரிக்குத் தண்டனை.

௧௰—௧—௨௯-ல் பல்லாரி ஜில்லாவைச் சேர்ந்த பெருமை நரசிம்ம ராஜு என்பவருடைய தாயார் அருகிலுள்ள ஒரு வீட்டிலிருந்து தண்ணீர் எடுக்கப்போகும் பொழுது, ஒரு மாலா ஸ்திரீ கிட்டச் சென்று விட்டாள். அதனால் அந்தம்மாள் கோபமுண்டு, தீண்டாத ஸ்திரீ அருகில் வந்ததற்காக அவளைத் திட்டினார். 'நான் பார்க்கவில்லை; பார்த்திருந்தால் கிட்ட வருவேனா' என அந்த மாலா ஸ்திரீ பதிலளித்தாள். விஷயம் நரசிம்ம ராஜுவுக்குக்கூறப்பட்டதும் அவர் அந்தஸ்திரீயை அதட்டி அடித்ததாகக் கூறப்படுகிறது. அச்சமயம் மாலா ஸ்திரீயின் எஜமானர் அப்பக்கம் வர, விஷயத்தை அறிந்து பெரமய்ய நரசிம்ம ராஜுவைக் கட்டப்பாரையா லடித்துக் கொன்றதாகக் குற்றஞ் சாட்டப்பட்டிருக்கிறது. செஷன்ஸ் ஜட்ஜியால் எதிரிக்கு ௨ வருடம் கடுங் காவலும் ௧௦௦ ரூ அபராதமும் விதிக்கப்பட்டன. ஹைக்கோர்ட்டில் தண்டனை ஊர்ஜிதப்படுத்தப் பட்டிருக்கிறது.

### புரட்சி விளம்பரம்.

கல்கத்தாவில் நடைபெற்ற சைமன் கமிஷன் பகிஷ்கார ஊர்வலத்தில் 'இந்தியாவில் புரட்சி நீடூழிவாழ்க' என்ற விளம்பரத்தைத் தூக்கிச்சென்ற சுல்தான் அலி, கிருபேந்திரநாத மஜூம்தார் என்ற இருவர் கைது செய்யப்பட்டிருக்கின்றனர்.

### கல்கத்தா கார்ப்பரேஷன்.

அ௫ லட்சம் ரூபாய் கடன்.

கல்கத்தா கார்ப்பரேஷனுக்கு அ௫ லட்சம் ரூபாய் கடன்கொடுக்க இந்தியா கவர்ன்மெண்டு சம்மதித்திருக்கிறது.

### காபி தேயிலைப்பானம்.

பெல்கிரேடில் தடுக்கப்பட்டது.

ஸிவில் ஸர்வீஸினர் சம்பந்தமாக பெல்கிரேடில் கண்டிப்பான உத்தரவு வெளியிடப்பட்டிருக்கிறது. இதன்படி கவர்ன்மெண்டு காரியாலயங்களில், காபியோ தேயிலையோ குடிப்பது அடியோடு தடுக்கப்பட்டிருக்கிறது.

—



## சுயமரியாதை மணம்.

பொட்டுக்கட்டுதலை மீறிய மாது.

கோவை, செங்குந்த வகுப்பைச் சேர்ந்த திரு. எம். சுப்பம்மாள் என்ற மாது தனது பெற்றோர்களால் கோவிலுக்குப் பொட்டுக்கட்டி விடப்பட்டிருந்த போதிலும், பக்குவ காலமடைந்தது முதல் ஈன வாழ்க்கையில் வெறுப்புக்கொண்டு பெற்றோர்களை விட்டுப் பிரிந்து உபாத்தியாயினித் தொழிலிற் புகுந்து பரிசுத்த கன்னிகையாக, ஈரோடு கவர்ன்மெண்டு பெண்கள் போதனாமுறைப் பாடசாலையில் வசித்துக்கொண்டிருந்தார். வடக்குப் புதுப்பாளையத்தைச் சேர்ந்த திரு. எம். பெரிய பெருமாள் பிள்ளை என்பவர் சீர்திருத்த மணம்புரிய ஆவல் கொண்டிருந்தார். இவ்விருவரும் காதல்கொண்டு, காதல்மணம் நிகழ்த்த நிச்சயித்தனர். சென்ற ஜனவரி ௨௪-ம் தேதி ஈழுமாத்தூரில் திரு. நாயக்கர் ஸ்ரீமதி நாயக்கர் முதலியோர் முன்னிலையில சுயமரியாதை மணம் நடத்தப்பட்டது.

—

### லார்டு பீவர் புருக் தர்மம்.

வைத்தியக் கல்விக்கு ௨௨அ௦௦௦ பவுன்.

பத்திரிகைச் சொந்தக்காரரான லார்டு பீவர் புருக் முன் ஒருக்கால் மோட்டாரில் சென்றுகொண்டிருக்கும்பொழுது விபத்திற்காளாகி ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்றார். இதற்கு நன்றியாக பிரதம மந்திரியிடம் ௨௨அ௦௦௦ பவுன் கொடுத்து வைத்தியக் கல்வியின் உபயோகத்திற்காக அதைச் செலவிடுமாறு கேட்டிருக்கிறார். ௨௪ ஆஸ்பத்திரிகளைப் பொறுக்கி அவற்றிற்குச் செலவிட பிரதம மந்திரி உத்தேசித்திருக்கிறாரென ரக்பிச் செய்தி கூறுகிறது.

### ரங்கூனில் தீ விபத்து.

நான்கு படகுகள் எரிந்தன.

'ஸைனுங்யாங்' என்றவிடத்திலிருந்து எண்ணெய் ஏற்றி வந்த படகுகள் ரங்கூனுக்கருகில் நில்லா என்ற துறையில் நின்று கொண்டிருந்தன. திடீரென ஒரு படகில் தீப்பற்றிக்கொண்டது. பிரிட்டிஷ் பர்மா பெட்ரோலியம் கம்பெனிக்குச் சொந்தமான மற்றும் ௩ படகுகளிலும் தீப்பற்றிக் கொண்டதென்றும் இதனால் இருவருக்குப் பலத்த காயமேற்பட்டிருப்பதாகவும் ரங்கூன் செய்தி கூறுகிறது.

### மின்சார எமன்.

சென்ற வியாழக்கிழமை மதுரையில் கருப்பையா என்ற "பிட்டர்" கற்பகம் பொடிக்கடையில் ஒரு 'பல்பை' மாட்டிக் கொண்டிருக்கையில மின்சாரத்தால் தாக்குண்டு உயிர்துறந்தார்.

—

## நோட்டீஸ்.

தேவகோட்டை

டி. முன்ஸீப் கோர்ட்டு.

1928-ஞு O. S. No. 252.

| | |
|---|---|
| சித. லெ. சித. நடேசன் செட்டியார் என்ற சிதம்பரம செட்டியார். | வாதி. |
| எழுவங்கோட்டை தாலுகா பிளார் கிராமத்திலிருக்கும் ஆறுமுகம் பிள்ளை மகன் சுப. ஆறு. ஷண்முகம் பிள்ளை. | பிரதிவாதி. |

மேற்படி பிரதிவாதிக்கு தெரிவிப்பது என்னவென்றால்.—

வாதிக்கு நீர் 5—10—22-உயில் எழுதிக்கொடுத்திருக்கிற அடமானப் பத்திரப்படிக்குள்ள தொகையை வசூல் பற்ற வாதி உம்முடைய பேரில் பிராது செய்து 28—2—29உ வாய்தா போடப்பட்டிருக்கிறது. அன்று நீர் நேரிலாவது வக்கீல் மூலமாயாவது ஆஜராகி உமக்குள்ள எதிர்வாதத்தை தெரிவித்துக்கொள்ள வேண்டியது. தவறினால் உம் பேரில் எக்ஸ்பார்ட்டி டிக்ரி பிறப்பிக்கப்படும். (305)

எஸ். சுப்பிரமணிய ஐயர்.

தேவகோட்டை 29—1—29. } வாதி அட்வொகேட்.

# முதலாவது மாகாண சுயமரியாதை மகா நாடு.

### நிகழ்ச்சிக் குறிப்பு.

விளம்பர அதிகாரிதிரு. ஜே. எஸ். கண்ணப்பர் அடியில் வருமாறு அறிவிக்கிறார்:—

1929 ஞூ பிப்ரவரி மீ 17௳ ஞாயிற்றுக் கிழமை:—

காலை 7-மணிக்கு ஊர்வலம் சென்னை தியாகராய ஞாபகக் கட்டிடத்தை விட்டுச்செல்லும்.

7-15 ஜில்லா போர்டு சிப்பந்திகள் கிராஸ் ரோட்டில் தலைவருக்கு வரவேற்பளிப்பார்கள்.

7-30 ஆலந்தூர் வளைவில் வரவேற்பு.

7-45 பல்லாவரம் மகாஜனங்கள் 'வரவேற்பு (பிஸ்கெட், காபி, பழங்கள் வழங்கப்படும்.)

8-15 ஊர்வலம் இருப்புலியூர் வளைவு வந்து சேரும்.

8-40 வண்டலூரில் வரவேற்பு.

9-10 கூடுவாஞ்சேரி வளைவு வந்துசேரும்.

9-30 சிங்கப்பெருமாள் கோவிலில் வரவேற்பு.

9-45 தம்பிரான்வளைவு (செங்கற்பட்டு முனிஸிபல் டோல்கேட்) வந்துசேரும்.

10-10 செகற்பட்டு மகாஜனங்கள் வளைவு பந்தல் வந்து சேரும் (முனிஸிபல் சபைத் தலைவர் மந்திரிகளை வரவேற்று பூமாலை சூட்டுவார்.)

10-20 ஊர்வலம் மேலமையூர் வழியாக பனகால் தோட்டத்துக்குச் செல்லும்.

10-30 ஜில்லா சுயமரியாதை வளைவு பந்தல் வந்து சேரும்.

11-10 பானகல் தோட்டம் வந்து சேரும். (திரு. பி. டி. ராஜன் எம். எல். ஸி. அவர்கள் சுயமரியாதைக் கொடியை அவிழ்த்துப் பறக்கவிடுவார்.)

11-20 நாயர் மண்டபத்தில் கூட்டம் (திரு. ஏ. ராமசாமி முதலியார் தலைமை வகிப்பார்.)

11-35 பனகால் அரசரின் உருவப் படத்தைத் திறந்துவைக்கும்படி திரு. ஏ. ராமசாமி முதலியார் திவான்பகதூர் கிருஷ்ணன் நாயரைக் கேட்டுக்கொள்வதாக ஒரு பிரசங்கம் செய்வார்.)

11-50 கனம் திவான்பகதூர் எம் கிருஷ்ணன் நாயர் பனகால் அரசரின் உருவப்படத்தைத் திறந்துவைப்பார்.

12-10 திரு ஈ. வே. ராமசாமி நாயக்கர் வந்தனோபசாரம் கூறுதல்.

12-30 மகாநாட்டு டெலிகேட்டுகளும், விருந்தினர்களும் தத்தம் ஜாகைக்கு வந்து சேருதல்

பிற்பகல் நடவடிக்கை.

மாலை 2-40 மணிக்கு கனம் திரு. எஸ். முத்தையா முதலியார் விவசாயம் பொருட்காட்சியைத் திறந்து வைப்பார்.

3 கனம் மந்திரிகளுக்கு முனிஸிபல் பிரயாணிகள் தங்கும் பங்களாவில் பத்திரம் வாசித்துக் கொடுக்கப்படும்.

3-40 கனம் முதன் மந்திரி டாக்டர் பி. சுப்பராயன் அவர்களின் உருவப் படத்தைத் திறந்து வைக்கும்படி கனம் மந்திரி ஸ்ரீ சேதுரத்தினம் ஐயர் அவர்கள் கான் பகதூர் ஸர். மகமது உஸ்மான் அவர்களைக் கேட்டுக்கொண்டு ஓர் சொற்பொழிவு நிகழ்த்துவார். திரு. கே. வி. மேனன் அவர்களின் வந்தனோபசாரம்.

4-45 டாக்டர் பி. சுப்பராயன் சுயமரியாதை மகாநாட்டைத் திறந்து வைப்பார்.

5 வரவேற்புக் கழகத் தலைவர் ராவ் பகதூர் எம். கிருஷ்ணசாமி செட்டியார் அவர்களின் வரவேற்புப் பிரசங்கம்.

5-15 திரு. ஈ. வெ. ராமசாமி நாயக்கர் அவர்கள் மகாநாட்டுக்குத் தலைமை வகிக்கும்படி திரு. டபிள்யூ. பி. ஏ. சௌந்தரபாண்டிய நாடாரைப் பிரேரேபித்துப் பேசுவார். சிலர் ஆமோதித்தும், ஆதரித்தும் பேசுவார்கள்.

6 தலைவர் ஸ்தானத்தில் அமர்ந்ததும், காரியதரிசி திரு. எம். வேதாசல முதலியார் தலைவருக்கும், ஏனையோருக்கும் மாலை சூட்டுவார்.

6-10 மகாநாட்டுத்தலைவர் சொற்பொழிவு.

8-30 விஷயாலோசனைக் கமிட்டிக் கூட்டம். (காலம் மகாநாட்டில் தலைவரால் குறிப்பிடப்படும்)

9-30 திருச்சி முருகானந்த சபையார் சுயமரியாதை நாடகம் ஒன்றை மகாநாட்டுப் பந்தலில் நடித்துக் காட்டுவார்கள். (டிக்கட் உள்ளவர்களே அனுமதிக்கப் படுவார்கள்.) மகாநாட்டுக் காம்பவுண்டில் சினிமாக்காட்சி இலவசமாக எல்லோருக்கும் காட்டப்படும்.

பிப்ரவரி மீ 18௳ திங்கட்கிழமை:—

காலை 8-30 மணிக்கு மகாநாடு மீண்டும் கூடும்.

11-30 ,, பல முக்கிய தீர்மானங்கள் விவாதத்துக்கு வரும் மாலை 2-முதல் 5-வரை, மீண்டும் மகாநாடு கூடும்.

5-30 திரு. எம். வேதாசல முதலியார், திரு ஜே எஸ் கண்ணப்பர் ஆகியோர்கள் தலைவருக்கும், டெலிகேட்டுகளுக்கும் ஏனையோருக்கும் வந்தனோபசாரம் கூறுதல்

8-30 சங்கீதக் கலை மகாநாடு கூடும் திரு வி ஜயராம் நாயுடு தலைமை வகித்து பதக்கங்களும், கோப்பைகளும் பரிசளிப்பார்.

பிரதிநிதிகள் தங்குவதற்குரிய ஜாகைகள்.

கான்பாலஸ் பந்தல், கோகேல் ஹால், முனிஸிபல் டௌண் டள்ளிக்கூடம், திரு. அப்பால்வாமி முதலியார் வீடு, திரு. கெ. நாராயண ஸ்வாமி நாயுடுவின் சத்திரம், செங்கற்பட்டு ரயில்வே ஸ்டேஷன், அரசாங்க ஆஸ்பத்திரி, முனிஸிபல் சத்திரம், வேணு கோபால். செட்டிகிளப், முனிஸிபல் ஆபீஸ், தலைமைத் தபாலாபீஸ், முனிஸிபல் முசாவரி பங்களா, டாக்டர் ஏகாம்பர முதலியார் வீடு, ரோட் தெரு, கோவிந்தசாமி முதலியார் வீடு மேட்டுத்தெரு போலீஸ் ஸ்டேஷன் வேறு பல இடங்களும், பிரதிநிதிகள் தங்குவதற்காகத் தயாரிக்கப்பட்டிருக்கின்றன

—

சுயமரியாதை மகாநாட்டிற்குத்

## தனவணிகநாட்டுப்பிரதிநிதிகள்

செங்கற்பட்டு சுயமரியாதை மகாநாட்டிற்கு தனவணிக நாட்டிலிருந்து அடியிற்கண்ட பிரதிநிதிகள் செல்வார்களெனத் தெரிகிறது:—

திருவாளர்கள் பிச்சப்பா சுப்பிரமணியன் செட்டியார், சொ. முருகப்ப செட்டியார், க. வீரப்ப செட்டியார், சித. சோம. சிதம்பரஞ் செட்டியார், கே. எல். சிங்காரவேலுப் பிள்ளை, சா. ந. சா. தெ. சிவராமன் செட்டியார், சா. ந. சா. தெ. அருணாசலச் செட்டியார், ஆ. சொக்கலிங்கம் செட்டியார், சா. கா. அ. அ. அழ. அரு. அருணாசலஞ் செட்டியார், ப. ராம, பழ. ராமநாதன் செட்டியார், மெ. மெ. கணேசன் செட்டியார், சு. ராம. அரு. சோமசுந்தரம் செட்டியார், க. சொ. அரு. அருணாசலஞ் செட்டியார், ராம. சுப்பிரமணியன் செட்டியார், குமா. சோமசுந்தரஞ் செட்டியார், பெரி சி. மெய்யப்பன் அம்பலம், ப. சிவானந்தம் கு. கும்பலிங்கம் பிள்ளை, ராம. சு. அருணகிரி செட்டியார், கரு. முத்து சிவலிங்கம் செட்டியார், வயி. சு. ஷண்முகஞ் செட்டியார், மு. ராம. பெரியணன் செட்டியார். வேறு பலருஞ் செல்வார்களெனத் தெரிகிறது.

—

